# தலமரங்கள்

டாக்டர் கே. கே. சுந்தர சோபிதராஜ், எம்.ஏ., பிஎச்.டி.
*தமிழ் விரிவுரையாளர்*
*சென்னைக் கிறித்தவக் கல்லூரி*

திருமலை-திருப்பதி தேவஸ்தானத்தினரின்
பெருநன்கொடை ரூபாய் பத்தாயிரத்தின்
உதவியுடன் இந்நூல் வெளியிடப்பெறுகிறது

**சோபிதம்**
*5-A, பாரதியார் தெரு*
*ஆனந்தபுரம், கிழக்குத் தாம்பரம், சென்னை-600 059*

# தலமரங்கள்

டாக்டர் கே. கே. சுந்தர சோபிதராஜ்
விரிவுரையாளர், தமிழ்த்துறை
சென்னைக் கிறித்தவக் கல்லூரி
கிழக்குத் தாம்பரம், சென்னை—600 059

விலை ரூ. 75

முதற்பதிப்பு, ஜனவரி 1994

சோபிதம் 19

வெளியீடு:
சோபிதம்
5—A, பாரதியார் தெரு
ஆனந்தபுரம்
கிழக்குத் தாம்பரம், சென்னை—600 059

பிரதிகள் கிடைக்குமிடம்
சி. எல். எஸ். புத்தக நிலையங்கள்
சென்னை, கோயம்புத்தூர்,
மதுரை, கொடைக்கானல்

அச்சாக்கம்
சி. எல். எஸ். அச்சகம், வேப்பேரி, சென்னை—600 007

# TALAMARANGAL

Dr. K. K. SUNDARA SOBITHARAJ
Lecturer in Tamil
Madras Christian College
East Tambaram, Madras-600059

**Price Rs. 75/-**

*First Edition, January* **1994**

**SOBITHAM 19**

Publisher:
**SOBITHAM**
5-A, Bharathiyar Street
Anandapuram
East Tambaram, Madras-600 059

Copies also available at
C.L.S. BOOK SHOPS
Madras, Coimbatore,
Madurai & Kodaikkanal.

**Printed at The C. L. S. Press, Vepery, Madras-600 007**

காணிக்கை

நினைவுகளில் நிறைந்திருக்கும்

அன்பு அன்னைக்கு . . .

**டாக்டர் கி. நாச்சிமுத்து**
பேராசிரியர்
தமிழ்த்துறை, கேரளப் பல்கலைக் கழகம்

காரியவட்டம்
திருவனந்தபுரம்

# முன்னுரை

டாக்டர் சுந்தர சோபிதராஜ் தம் முனைவர் பட்ட ஆய்விற்காகக் கேரளப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறையில் இலக்கியங்கள், கல்வெட்டுக்கள் அடிப்படையில் பக்திக் காலத் தாவரங்கள் என்ற தலைப்பில் ஆய்வு செய்தார். அவ்வாய்வில் பாடல் பெற்ற கோயில்களில் உள்ள தலமரங்கள் என்ற தலைப்பில் மிக விரிவாக ஆராய்ந்து விளக்கியிருந்தார். அதைப் புகைப்படங்கள், கள ஆய்வுக் குறிப்புகள் முதலியவற்றுடன் இப்போது தனி நூலாக வெளியிடுகிறார்.

தென்னகத்திலுள்ள சுமார் 400 சைவ, வைணவக் கோயில்களை நேரில் ஒருமுறைக்கு மேல் சென்று கள ஆய்வு செய்து தலமரங்கள் பற்றிய பல அரிய செய்திகளைத் திரட்டினார் திரு. சோபிதராஜ்; அவற்றைப் பகுத்தாய்ந்து தாம் கண்ட முடிவுகளையும் சேர்த்தெழுதி இந்நூலில் வெளியிடுகிறார்.

மரவழிபாடு, மரங்களின் கீழ் இறைவழிபாடு என்பனவற்றின் வரலாற்றை எடுத்துரைத்து இறைவனுக்கும் தலமரங்களுக்கும் உள்ள தொடர்பைத் தேவார, திவ்வியப் பிரபந்தம் முதலிய இலக்கியங்களிலும் ஊர்ப் பெயர்கள் முதலியவற்றிலும் காணப்படுமாற்றைத் தக்க சான்றுகளுடன் ஆராய்ந்து நிலைநாட்டுகிறார். சிவன் கோயில் தலமரங்கள் 74—உம் திருமால் கோயில் தலமரங்கள் 18—உம் காணப்படுவதாக ஆசிரியர் கணக்கிட்டுரைக்கிறார்; இவற்றில் வில்வம் (34) வன்னி (17), கொன்றை (16) போன்றவை பல இடங்களில் தலமரங்களாகக் காணப்படுகின்றன. தலமரங்களின் பாகங்கள் திருக்கோயில் வழிபாட்டிலும், மருந்து முதலியவற்றிற்காகவும் பயன்படுமாற்றை நன்கு அட்டவணையிட்டுக் காட்டுகிறார் சோபிதராஜ். தலமரங்களின் இன்றைய நிலையை நேரில் சென்று கண்டுரைத்திருப்பதும் அவற்றின் படங்களை அரிதின் முயன்றெடுத்து இங்கு வெளியிட்டிருப்பதும் மிகவும் போற்ற வேண்டியதாகும். அவை கோயில் சிற்பங்களில் காணப்படுமாற்றையும் அவை பற்றி வழங்கும் கதைகளையும் தொகுத்துக் கொடுத்திருப்பது ஆய்வாளர்க்குப் பெருவிருந்தாகும். தலமரங்கள் பற்றிய பல்வேறு கொள்கைகளையும் அவற்றின் தாவரவியல் பெயர்களையும் தொகுத்திருப்பது இன்னும் பல ஆய்வுகளுக்குத் துணை செய்வதாகும். மேலே கண்ட செய்திகளை எட்டு விரிவான அட்டவணைகளில் அமைத்துக் கொடுத்திருப்பது ஆசிரியரின் அரிய உழைப்பையும் ஆய்வுத் திறனையும் வெளிப்படுத்துவதாக உள்ளது.

இந்நூல் இலக்கிய ஆராய்ச்சி, சமய ஆராய்ச்சி, சுற்றுப்புறவியல் ஆய்வு, தாவரவியல் ஆய்வு முதலியவற்றிற்குப் பெருந்துணை செய்வதாகும். இந்நூல் சமய நிலையில் இறைவன் அடியார்க்கும் இன்பம் தரும் பல செய்திகளை உள்ளடக்கியதாகும். இந்நூலின் மேன்மையையும் சிறப்பையும் இதை ஊன்றிப் படித்து நோக்குவார் விதந்து பாராட்டுவர் என்பது திண்ணம்.

இந்நூலாசிரியர் இலக்கியங்கட்கும் தாவரங்களுக்கும் உள்ள தொடர்புகளை ஆராய்ந்து முன்பே சில நூல்களை வெளியிட்டுள்ளார். ஆர்வம் குன்றாது அவர் இத்துறையில் ஈடுபட்டு வருவது மகிழ்ச்சியைத் தருகிறது. அவர் மேலும் பல அரிய நூல்களை வெளியிட்டு ஆராய்ச்சித் துறையில் சிறப்புற்றோங்க வாழ்த்துகிறேன்.

*15—12—93*

**கி. நாச்சிமுத்து**

டாக்டர் தி. ரா. செல்வராசன்
தமிழ்த்துறைத் தலைவர்
சென்னைக் கிறித்தவக் கல்லூரி
கிழக்குத் தாம்பரம், சென்னை—600 059

# அணிந்துரை

சமய வழிபாட்டில் மூர்த்தி, தலம், தீர்த்தம் என்னும் மூன்றும் முறைமையில் சிறந்து விளங்குகின்றன. பரம்பொருள் ஒன்றேயாயினும் சமயத் தத்துவங்கட்கு ஏற்ப வேறு வேறு பெயர்களால் ஆங்காங்கு வழிபடப்படுகிறது. பக்தியுடன் தாம் வணங்கும் தெய்வம் பல இடங்களில் கோயில் கொண்டிருப்பினும் குறிப்பிட்ட தலத்திற்குச் சென்று வழிபடுவதையே மக்கள் பெரிதும் விரும்புகிறார்கள். அத்தலத்தின் இருப்பும் இயற்கைச் சூழலும் புனிதத் தன்மையைச் சுட்டுகின்றன.

அடியவர் புடைசூழ நடைப்பயணம் மேற்கொண்டு திருக்கோயிலை வலம் வந்து வணங்கி இறைவனைப் போற்றிப் பாடப்பெற்ற தெய்வப் பாடல்கள் தமிழுக்கே தனிச்சிறப்புடையன; உலக பக்தி இலக்கியத்தில் ஈடு இணையற்று விளங்குவன. சமயச் சான்றோர்களால் பாடும் பெருமை பெற்ற தலங்கள் பிற தலங்களினும் மேம்பாடுடையனவாக மக்களால் புரிந்து வழிபடப் பெற்றன. இத்தகைய தலங்களில் உள்ள மரங்களும் தெய்வச் சிறப்புடையனவாகப் போற்றி வணங்கப்பட்டன.

திருக்கோயில்களை எண்ணுந்தோறும் ஆங்கு எழுந்தருளிய இறைவனுடன் அங்குள்ள தலமரங்கள் நமது மனக்கண்ணில் தோன்றுவதுண்டு. காஞ்சியின் மாவும், மயிலையின் புன்னையும், ஆனைக்கா நாவலும், குற்றாலத்தின் குறும்பலாவும், பெருந்துறையின் குருந்த மரமும் இன்றும் சமய உலகில் 'பெருவாழ்வு' பெற்று விளங்குகின்றன.

வழிபாட்டிற்குரிய தலமரங்கள் பற்றிய குறிப்புக்கள் பக்திப் பனுவல்களில் சிற்சிலவே காணப்படுகின்றன. வேறுபடும் சமயம் எல்லாம் புகுந்துபார்க்கின் விளங்கும் பரம்பொருள் ஒன்றே என்ற தெளிவும், தலமரங்கள் பற்றிய செய்திகள் அனைத்தையும் தொகுத்திட வேண்டும் என்ற ஆர்வமும், திருக்கோயில்களுக்கு நேரில் சென்று கண்டு கேட்டு உண்மை அறியும் செயலூக்கமும் கொண்ட பேராசிரியர் திரு. சுந்தர சோபிதராஜ் அவர்களின் பேருழைப்பால் உருவாகிய இவ்வாய்வு நூல் சமய உலகிற்கு ஒரு பெரும் பங்களிப்பாகும்.

சிவத்தலங்கள் 269, வைணவத் தலங்கள் 93 ஆக 364—கோகயில்லுக்கு நேரில் சென்று தாம் கண்டறிந்த செய்திகளை வகுத்தும் தொகுத்தும் அட்டவணையிட்டுச் செவ்விதின் புலப்படுத்தும் ஆசிரியரின் பேருழைப்பின் புலப்பாடே இவ்வாய்வு நூல்.

சிவாலயங்களில் உள்ள தலமரங்கள் 74 எனவும், அவற்றுள் வில்வம் 34 தலங்களிலும், வன்னி 17 தலங்களிலும், கொன்றை 16 தலங்களிலும் தலமரங்களாக உள்ளன என ஆசிரியர் வரையறுத்துக் கூறுகிறார். (ப. 38).

திருவெண்காட்டுக் கோயிலின் வில்வமரத்தில் முள் இல்லை எனவும், திருக்குருகூர் கோயிலின் புளிய மரத்தின் இலைகள் பிற புளிய மரங்களைப்போல மூடுவதில்லை எனவும் (ப. 50) தலமரங்களின் அற்புதத் தன்மையைச் சுட்டி ஆசிரியர் மரவழிபாடு அமைந்ததற்குரிய காரணத்தைக் காட்டுகிறார்.

திருத்துருத்தியின் (ஆடுதுறை—குற்றாலம்) தலமரமாகிய உக்தால மரம் பூப்பதுடன் தொடர்புடைய மக்கள் நம்பிக்கையை அறிவியல் கண்கொண்டு விளக்குவது (ப. 51) சிறப்புக் குரியது. ஒரே தலத்திற்குப் பல மரங்கள் உள்ள செய்தியையும் ஆசிரியர் குறிக்கின்றார்.

சுற்றுப்புறச் சூழல் என்னும் கருத்தாக்கம் மக்களின் நலவாழ்விற்கு அடிப்படையாக இன்று போற்றப்படுகிறது. ஆனால் பழந்தமிழ் மக்கள் இயற்கையில் இறைவனைக் கண்டு தெளிந்து போற்றி வணங்கிய சிறப்பின் கூறுபாடே தலமரங்கள் எனவும் அந்த வழிபாட்டிற்கு அடிப் படையாக உள்ள காரணங்கள் இவை எனவும் ஆசிரியர் ஆராய்ந்து கூறும் கருத்துக்கள் போற்றத் தக்கன.

இயற்கையில் இறைமை கண்டு
இதயத்தில் ஈரம் காப்போம்!

**தி. ரா. செல்வராசன்**

கே. கே. சுந்தர சோபிதராஜ்

விரிவுரையாளர்,
தமிழ்த்துறை
சென்னைக் கிறித்தவக் கல்லூரி
கிழக்குத் தாம்பரம், சென்னை—600 059

## என்னுரை

ஆய்வு மாணவனாக என்னை ஏற்றுக்கொண்ட நாள் தொட்டு, தயக்கம் விளைந்த பொழுதெல்லாம் ஊக்குவித்து, ஆய்வுக் கட்டுரைகள் நூல் வடிவம் பெற வழிமுறை காட்டி முன்னுரை தந்துவரும் பேராசிரியர் டாக்டர் கி. நாச்சிமுத்து அவர்களுக்கும்...

நூல் வெளிவர ஆர்வமூட்டி அணிந்துரையும் நல்கிய தமிழ்த்துறைத் தலைவர் அன்பு அண்ணன் டாக்டர் தி. ரா. செல்வராசன் அவர்களுக்கும்...

கடின உழைப்பின் பயனாக உருவாகிய ஆய்வேடு இதுவெனத் தன் எழுத்தாள நண்பருக்கெல்லாம் காட்டி மகிழ்ந்து, இது நூல் வடிவம் பெற ஊக்குவித்த மதிப்பிற்குரிய திரு. சுந்தர ராமசாமி அவர்களுக்கும்...

என் உடன் ஆய்வாளர்களுக்கும்...

என் உடன் பணியாற்றும் ஆசிரியப் பெருமக்கள் அனைவருக்கும்...

இந்நூலை வெளியிட ஆக்கமும் ஊக்கமும் தந்துவரும் தாவரஇயல் துறைப் பேராசிரியர் டாக்டர் தயானந்தன் அவர்களுக்கும்...

தாவர இனப் பெயர்களை இன்றைய நிலைக்குச் செப்பம் செய்து தந்த டாக்டர் நரசிம்மனுக்கும்...

நூல் வெளியீட்டிற்காகப் பெருநன்கொடை ரூ. 10,000 வழங்கிய திருமலை—திருப்பதி தேவஸ்தானத்தினருக்கும்...

1975 ஆம் ஆண்டுமுதல் 1981 ஆம் ஆண்டின் இறுதிவரை நிகழ்ந்த இவ்வாய்வின் நிறைவேறுதலுக்குத் துணைநின்ற—என் வாழ்விலும் உயர்விலும் அக்கறை கொண்ட உறவினர், நண்பர், அவர்தம் உடன் பிறந்தோர்—அனைவருக்கும்...

ஆய்வுக்கெனத் தேவை ஏற்பட்டபோதெல்லாம் பண உதவி செய்தும் என் சிறப்புக்களில் எனக்குத் தோன்றாத் துணையாக நிற்கும் என் அன்னைக்கும்...

பண உதவி செய்யத் தயங்காத என் தந்தைக்கும்...

என் செலவினங்களுக்குக் கணக்குப் பார்க்காத துணைவி கனகாம்பிகாவுக்கும்...

என் எழுத்துப் பணிகளிடையே தொல்லைதரும் அன்புக் குழந்தைகளுக்கும்...

நூலின் சிறந்த அச்சாக்கத்திற்கு உதவிய கிறிஸ்தவ இலக்கியச் சங்க அச்சகத்தின் ஊழியர்கட்கும் நிர்வாகத்தினருக்கும்...

சென்னை கிறிஸ்தவ இலக்கியச் சங்கப் பொதுச் செயலாளர் மறைதிரு. டாக்டர் தி. தயானந்தன் பிரான்சிஸ் அவர்கட்கும்...

வார்த்தைகளால் அன்றி நெஞ்ச நிறைவுடனும் நினைவுகளுடனும் நன்றி.

நன்றி மறவா,

சுந்தர சோபிதராஜ்

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | — | அகநானூறு |
| ஆ. இ. | — | ஆண்டு இல்லை |
| ஐங். | — | ஐங்குறுநூறு |
| குறுந். | — | குறுந்தொகை |
| சிலம்பு. | — | சிலப்பதிகாரம் |
| திருவா. | — | திருவாசகம் |
| திவ்ய. | — | திவ்யப்பிரபந்தம் |
| தேவா. | — | தேவாரம் |
| தொல். பொருள். | — | தொல்காப்பியம், பொருளதிகாரம் |
| நம்பி அகப். | — | நம்பி அகப்பொருள் |
| நற். | — | நற்றிணை |
| ப. ஆ. | — | பதிப்பாசிரியர் |
| பட்டினப். | — | பட்டினப்பாலை |
| பரி. | — | பரிபாடல் |
| புறம். | — | புறநானூறு |
| Ed. | — | Editor |
| et al. | — | et alia |
| Vol. | — | Volume |

# முன்னுரை

## பக்திக் காலம்

களப்பிரரை வென்ற பல்லவராட்சி சிம்ம விஷ்ணு (கி. பி. 575–615) காலந்தொடங்கி, பல்லவன் நிருபதுங்கவர்மன் (கி. பி. 850–882) காலம் வரை ஏறக்குறைய முந்நூறு ஆண்டுகள் தமிழ்நாட்டில் நிலைபெற்றிருந்தது. தமிழகத்தின் வடபகுதியைப் பல்லவர் அரசாண்ட இக் காலகட்டத்தில் தென்பகுதியைப் பாண்டியர் ஆட்சி செலுத்தினர். அக்காலப் பகுதியில் பல்லவர் பெற்றிருந்த மேம்பாட்டினால் அது பல்லவர் காலம் எனத் தமிழிலக்கிய வரலாற்றில் வழங்கப் படுகிறது. அதாவது, கி. பி. ஆறாம் நூற்றாண்டின் பிற்பகுதியோடு முடிந்ததாகக் கூறப்பட்ட சங்கம் மருவிய காலப் பகுதிக்கும் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தொடங்கிய சோழர் ஆட்சிக் காலத்துக்கும் இடைப்பட்ட காலமே பல்லவர் ஆட்சிக் காலம் ஆகும். சமயத் தொடர்பான வழிபாட்டுப் பாடல்கள் பல்லவர் காலத்துத் தோன்றியன போன்று வேறெக் காலத்திலும் தோன்றவில்லையாதலால் அக்காலத்தைப் பக்திக் காலம் என்றும் குறிப்பிடு கின்றனர்.

## பக்தி இலக்கியங்கள்

பக்திக் காலத்தில் சைவ சமயப் பெரியார்களான நாயன்மார்களும் வைணவ சமயப் பெரியார்களான ஆழ்வார்களும் தோன்றி, பக்திப் பாடல்களைப் பாடி ஊர் ஊராகச் சென்று தத்தம் சமயங்களுக்குப் புத்துயிர் ஊட்டினர். சைவர்கள் போற்றும் திருப்பதிகம் என்றழைக்கப் பட்ட தேவாரமும் வைணவ ஆழ்வார் பாடல்களின் தொகுதியான நாலாயிரத் திவ்விய பிரபந்தமும் சைவ வைணவ இலக்கியங்களுள் முதன்மையானவை.

திருநாவுக்கரசர், திருஞானசம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர் என்னும் சைவ அடியார் நால்வருள் முதல் மூவரும் பாடிய பாடல்களின் தொகுப்பே தேவாரம் என்றழைக்கப் படுகிறது. கல்நெஞ்சையும் கனிவிக்கும் தீஞ்சுவைத் தமிழ்ப் பாடல்களாலானது மாணிக்க வாசகரின் திருவாசகம். மாணிக்கவாசகர் எழுதிய மற்றுமொரு நூல் திருக்கோவையார். அகப் பொருள் துறையில் குறிப்பிட்ட தலைவன் தலைவியின் காதல் நிகழ்ச்சிகளைத் தொகுத்துப் பாடுவது கோவையாகும். திருக்கோவையாரில் காட்டப்படும் காதல் இறைவனுக்கும் ஆன்மா வுக்கும் உள்ள தொடர்பை விளக்குவதாகும்.

சைவ மதத்தில் பக்தி இயக்கத்தோடு யோக இயக்கமும் தொடங்கியதைத் திருமூலரின் திருமந்திரம் உணர்த்துகின்றது. ஞானம், யோகம், தவம், முக்தி போன்றவை பற்றிப் பாடப் பட்ட நூல் இது. இவை தவிர சேரமான் பெருமாள் நாயனாரின் திருவாரூர் மும்மணிக் கோவை, பொன்வண்ணத்தந்தாதி, ஆதி உலா என்னும் திருக்கயிலாய ஞான உலா ஆகியனவும் காரைக்காலம்மையாரின் திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம், திரு இரட்டை மணிமாலை, அற்புதத் திருவந்தாதி ஆகியனவும் ஐயடிகள் காடவர்கோன் இயற்றிய க்ஷேத்திரத் திருவெண் பாவும் பக்தி இலக்கியங்களே. இலக்கிய வரலாற்றாசிரியர்கள், நக்கீர தேவநாயனார், கபில தேவநாயனார், கல்லாட தேவ நாயனார், இளம்பெருமானடிகள், அதிரா அடிகள், பட்டினத்துப் பிள்ளையார் போன்றோர் பாடல்களும் இக்காலத்தன என்று குறிப்பிடுகின்றனர்.

வைணவ இலக்கியத் தொகுப்பான நாலாயிரத் திவ்யப் பிரபந்தத்தைப் பாடியவர்கள் பன்னிரு புலவர்கள். அவர்கள் ஆழ்வார்கள் என்று அழைக்கப்படுகின்றனர். பொய்கை யாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் ஆகிய மூவரும் காலத்தால் முற்பட்டவர்கள். பெரி

யாழ்வார், ஆண்டாள், குலசேகர ஆழ்வார், திருமழிசையாழ்வார், திருப்பாணாழ்வார், மதுர கவியாழ்வார், தொண்டரடிப்பொடியாழ்வார், திருமங்கையாழ்வார், நம்மாழ்வார் ஆகியோர் பிற ஆழ்வார்கள்.

சைவ வைணவத் துதி இலக்கியங்கள் தவிர, பெருந்தேவனார் பாரதம், பெருங்கதை எனும் உதயணன் வரலாறு கூறும் சமண இலக்கியம், பாண்டிக்கோவை என்னும் பாண்டிய வேந்தர்களின் புகழ்பாடும் நூல் (களவியலுரை போன்றவற்றில் கிடைக்கும் பாடல்களிலிருந்து தொகுக்கப்பட்டது), நந்திவர்மனின் புகழ்பாடும் நந்திக் கலம்பகம் ஆகியனவற்றையும் பக்திக் கால இலக்கியங்களாகக் குறிப்பிடுகின்றனர்.

நாயன்மார்களும் ஆழ்வார்களும் தலங்கள்தோறும் சென்று சமயப் பணியாற்றியபோது தாங்கள் கண்ட இறைவன், தலம், சூழலின் இயற்கைக் காட்சி ஆகியனவற்றை வருணனை செய்வதையே அவர்தம் பாடல்கள் உணர்த்துகின்றன. அக்காலத்தைச் சார்ந்த பிற இலக்கியங்களிலும் வருணனைப் பகுதிகள் உள்ளனவாயினும் தேவாரம், திருவாசகம், திவ்யப்பிரபந்தம் எனும் மூன்றனைப்போல மிகுதியாக இல்லை. பிற இலக்கியங்களின் காலம் குறித்துக் கருத்து வேறுபாடுடைய இலக்கிய வரலாற்றாசிரியர்களும் இம்மூன்று இலக்கியங்களையும் பக்திக் காலத்தவையாகவே கொள்கின்றனர். எனவே இம்மூன்று இலக்கியங்கள் மட்டுமே சான்றாதாரமாகக் கொள்ளப்படுகின்றன.

## பதிப்புக்களும் சுட்டுக் குறிப்புக்களும்

தேவாரத்திற்கு அடங்கன் முறை, திருமுறை, தலமுறை, எனப் பல்வேறு வகையிலான பதிப்புக்கள் இருந்தபோதிலும் தலமுறையில் மூவர் பாடல்களையும் தொகுத்துத் தரும் குமர குருபரன் பிள்ளை அவர்களின் 1968ஆம் ஆண்டு பதிப்பு ஆய்வுக்குத் துணையாகக் கொள்ளப் பட்டது.

திருவாசகத்திற்கும் பல பதிப்புக்கள் உண்டெனினும் உரை விளக்கத்துடன் அமைந்த கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்களின் 1968ஆம் ஆண்டுப் பதிப்பே அடிப்படை நூலாக அமையக் காரணமாயிற்று.

ஆழ்வார் பாடல்களையும் தலங்களைப் பாடியுள்ளமை பற்றிய குறிப்புக்களையும் தருகின்ற காரணத்தால் பாலகிருஷ்ணன் அவர்களின் 1977ஆம் ஆண்டுப் பதிப்பு திவ்யப் பிரபந்தப் பதிப்புக்களுள் ஏற்றுக்கொள்ளத்தக்கதாக அமைந்தது. இந்நூலினுள் வரும் செய்திகளுக்கு இம்மூன்று நூல்களின் அடிப்படையிலேயே எண்கள் குறிப்பிடப்படுகின்றன.

(தேவா. 430,1:3–4)—இங்குத் தேவா என்பது தேவாரத்தையும், 430 என்பது தல முறைப் பதிப்பின் பக்க எண்ணையும் 1 என்பது பாடல் எண்ணையும் 3–4 என்பது பாடல் அடிகளின் எண்களையும் குறிப்பதாகும். திருவாசகத்திலும் தேவாரத்தைப் போலவே பக்க எண், பாடல் எண், பாடலடி எண் ஆகியன சுட்டப்படுகின்றன. சான்று: (திருவா. 383,5:1–2).

திவ்யப் பிரபந்தத்தில் முதலாயிரம், இரண்டாமாயிரம், மூன்றாமாயிரம், நாலாமாயிரம் ஆகியனவற்றைக் குறிக்க முறையே I,II,III,IV—எனும் எண்களையும் பாலகிருஷ்ணன் பதிப்பின் பக்கம், பாடல் எண், பாடல் அடி எண் ஆகியனவும் சுட்டப்படுகின்றன.*

## மொத்தப் பாடல்கள்

தேவாரத் தலைமுறைப் பதிப்பின்படி திருஞான சம்பந்தர் பதிகங்கள் 386—பாடல்கள் 4195; திருநாவுக்கரசர் பதிகங்கள் 312—பாடல்கள் 3077; சுந்தரர் பதிகங்கள் 100—பாடல்கள் 1031; ஆக 798 பதிகங்களில் 8303 பாடல்கள் உள்ளன. இப்பாடல்களிலும் ஒரு சிலவற்றின்

* தேவார திருவாசக திவ்யப் பிரபந்தங்களில் பாடல்களை எண்ணிடும் முறை வெவ்வேறு பதிப்புக்களில் வெவ்வேறு விதமாக அமைந்திருப்பதால் ஒரே சீரான சுட்டுமுறை ஒன்றைப் பயன்படுத்த வாய்ப்பில்லை. எனவேதான் முன்னர் குறிப்பிட்ட பதிப்புக்களை அடிப்படையாகக்கொண்டு இம்முறை பயன்படுத்தப்படுகிறது.

ஓரிரு அடிகள் சிதைந்துள்ளன. திருவாசகத்தின் 51 பகுதியிலுமாக 658 பாடல்கள் அமைந்துள்ளன. திவ்யப் பிரபந்தத்தின் முதலாயிரத்தில் 947 பாடல்களும் இரண்டாமாயிரத்தில் 1134 பாடல்களும் மூன்றாமாயிரத்தில் 817 பாடல்களும் நான்காமாயிரத்தில் 1102 பாடல்களுமாக மொத்தம் 4000 பாடல்கள் உள்ளன.

## பாடல் குறிப்பிடும் தலங்கள்

ஊர்தோறும் சென்று சமயப்பணி செய்த நாயன்மார்களும் ஆழ்வார்களும் அந்தந்த ஊர்களில் உள்ள இறைவன்மீது பாடல் பாடினர். அவர்களால் பாடப்பெற்ற பகுதிகள் 'தலங்கள்' என்று சொல்லப்பட்டன. நாயன்மார்கள் பாடிய சிவத்தலங்கள் 275 எனவும் ஆழ்வார்கள் பாடிய திருமால் தலங்கள் 108 எனவும் பாடல்கள் குறிக்கின்றன. தலங்களை நாடுகள் அடிப்படையில் பாகுபடுத்திக் கூறுவது உண்டு. 'தமிழகத்தின் வட எல்லை வேங்கடம் எனவும் தென் எல்லை குமரி எனவும் தொல்காப்பியப் பாயிரத்தால் அறிகிறோம். பல நதிகளால் வளம் பெற்ற தமிழகத்தின் இருவேறு நதிகளுக்கு இடைப்பட்ட பகுதி நாடு என குறிக்கப்பட்டது. வட பெண்ணைக்கும் தென்பெண்ணைக்கும் இடைப்பட்ட பகுதி தொண்டை நாடு. தென் பெண்ணைக்கும் தென்னார்க்காடு மாவட்டத்தில் ஓடும் வடவெள்ளாற்றுக்கும் இடைப்பட்ட பகுதி நடுநாடு. வடவெள்ளாற்றுக்கும் புதுக்கோட்டைக்கருகில் ஓடும் தென்வெள்ளாற்றுக்கும் இடைப்பகுதி சோழநாடு தென்வெள்ளாற்றின் தென்பகுதி பாண்டி நாடு. இன்றைய கோயம்புத்தூர் மாவட்டமும் சேலம் மாவடடமும் சேர்ந்த நிலப்பகுதி கொங்குநாடு. மேலைக் கடற்கரைப் பகுதி சேரநாடாகும். அது மலை நாடு என வழங்கப்பட்டது (துரைசாமிப்பிள்ளை, 1978:1).

## சிவன் கோவில்களின் எண்ணிக்கை

> 'துங்கவட கயிலாய முதலா ஐந்துதுளு ஒன்று தொண்டை வடநாட்டு எண்ணான்கு
> தங்கு நடுநாட்டு இருபத்திரண்டுபொன் னித்தலம் நூற்றுத் தொண்ணூறு
> மலைநாட்டு ஒன்று
> கொங்கேழு சிங்களத்தில் இரண்டு வைகைகொழி தமிழ்நாட்டு ஈரேழு முதலாஞ் சூலச்
> செங்கையார் தலம் இருநூற்று எழுபா நான்கு...'
>
> (சுப்பிரமணிய பிள்ளை, 1931,8)

வடநாட்டில் 5; துளுநாட்டில் 1; தொண்டை நாட்டில் 32; நடுநாட்டில் 22; சோழ நாட்டில் 190; மலைநாட்டில் 1; கொங்குநாட்டில் 7; சிங்களத்தில் 2; பாண்டிநாட்டில் 14ஆகச் சிவபெருமானின் தலங்கள் 274 என்கிறது இப்பாடல். ஆகவே சோழநாட்டுத் தலங்கள் 190 என்று அறியமுடிகிறது. ஆனால் திருவிடைவாய்க் கல்வெட்டினின்றும் கண்டெடுக்கப்பட்ட திருஞானசம்பந்தரின் திருவிடைவாய்த் திருப்பதிகத்தினால் அறியப்படும் திருவிடைவாய் என்ற தலத்தையும் சேர்க்க சோழநாட்டுத் திருத்தலங்களின் எண்ணிக்கை 191 ஆகவும், தேவாரப் பாடல் பெற்ற தலங்களின் எண்ணிக்கை 275 ஆகவும் உயருகிறது. சோழநாட்டுத் தலங்களில் காவிரி வடகரைத் தலங்கள் 63; காவிரித் தென்கரைத் தலங்கள் 128. இவை அனைத்துமே சோழநாடு வடகரை, சோழநாடு தென்கரை, தொண்டைநாடு, நடுநாடு, பாண்டிநாடு, கொங்குநாடு, மலைநாடு என வரிசைப்படுத்தப்படுகின்றன. (பார்க்க: அட்டவணை: 1) வடநாட்டுத் தலங்கள்—5; துளுநாட்டுத்தலம்—1; ஈழநாட்டுத்தலம்—2—இவை தவிர்த்த 267 தலங்களையும் தமிழ் நாட்டனவாகக் குறிப்பிடுவர். சம்பந்தர் 230 கோயில்களுக்கும் நாவுக்கரசர் 130 கோயில்களுக்கும் சுந்தரர் 110 கோயில்களுக்கும் அடியார் புடைசூழச் சென்று இறைவனைத் தொழுது பாடினர் (இராசமாணிக்கனார், மா., 198,344).

## பாடல்பெற்ற சிவன் கோவில்களின் இன்றைய நிலை

தமிழகத்தில் உள்ளனவாகக் குறிப்பிடப்படும் தேவார, திருவாசகத் தலங்கள் 269இல் சோழநாட்டைச் சேர்ந்த திருத்தருமபுரம், திருத்தெளிச்சேரி, திருநள்ளாறு, திருவேட்டக்குடி,

நடுநாட்டைச் சேர்ந்த திருவடுகூர் என்னும் ஐந்து தலங்களும் புதுவை மாநிலத்தில் உள்ளன; மலைநாட்டுத் தலமான திருஅஞ்சைக்களம் கேரள மாநிலத்தில் உள்ளது. ஆயினும் இத்தலங் களும் தமிழகத் தலங்களாகவே கணக்கிடப்படுகின்றன.

சோழநாட்டுத் தலங்களுள் சிதம்பரத்திற்குத் தென்கிழக்கே சுமார் 10 கி.மீ. தூரத்தில் கொள்ளிடத்தின் வடகரையில் காரைமேடு என்னும் இடத்தருகே பண்டு இருந்த திருக்கழிப் பாலை என்னும் தலம் கொள்ளிட நதியால் அழிவுற்றது. இப்போது சிவபுரியிலுள்ள திருநெல் வாயில் என்னும் தலத்தருகே அப்பெயரால் ஓர் ஆலயம் கட்டப்பட்டுள்ளது. கும்பகோணத்துக்கு வடக்கேயுள்ள திருவியலூருக்கு அருகேயுள்ள திருந்துதேவன்குடி என்னும் தலம் அழிந்த நிலை யில் உள்ளது.

தொண்டை நாட்டுத் தலங்களுள் திருவெண்பாக்கம் என்னும் தலம் பூண்டி நீர்த் தேக்கத்தில் மூழ்கிற்று. தற்போது அதன் கரையிலேயே புது ஆலயம் கட்டப்பட்டுள்ளது. திருக் காளத்தி எனும் தொண்டை நாட்டுத் தலம் ஆந்திர மாநில ரேணுகுண்டா தொடர்வண்டி நிலையத்திற்கு அருகேயுள்ளது.

நடுநாட்டின் திருக்கூடலையாற்றூர், மணிமுத்தா நதியும் வெள்ளாறும் கூடும் சங்கமத்தில் இருந்தது. சுமார் நூறாண்டுகளுக்கு முன்னர் ஆற்று வெள்ளத்தால் அழிந்துபோயிற்று. தற் போது ஆற்றின் தென்கரையில் புதுக் கோவில் ஒன்று கட்டப்பட்டுள்ளது.

தமிழ்நாட்டுச் சிவன் கோவில்கள் 269இல் முன்னர் குறிக்கப்பட்ட சோழ நாட்டின் திருக் கழிப்பாலை, திருந்துதேவன்குடி; தொண்டை நாட்டின் திருவெண்பாக்கம், திருக்காளத்தி; நடு நாட்டின் திருக்கூடலையாற்றூர் என்னும் ஐந்தும் தவிர்த்த 264 தலங்களே இவ்ஆய்விற்கு அடிப் படையாகக் கொள்ளப்படுகின்றன.

தலம் என்பது ஒரு குறிப்பிட்ட கோவில் உள்ள ஊரைக் குறித்தது (திருமுதுகுன்றம்). ஊர் தலமெனக் குறிப்பிடும்போது சில இடங்களில் அங்குள்ள ஒன்றுக்கு மேற்பட்ட கோவில்கள் ஒரே தலமாகக் கொள்ளப்படுகின்றன. திருப்பழையாறை வடதளி என்னும் தலத்தில் பழையாறை, வடதளி என இரண்டு தனிக் கோவில்களும் திருநாலூர் மயானம் எனும் தலத்தில் திருநாலூர், திருமயானம் என்ற இரண்டு தனிக் கோவில்களும் சோழநாட்டில் காணப்படு கின்றன. சில இடங்களில் ஒரே ஊரிலுள்ள வெவ்வேறு கோவில்கள் வெவ்வேறு தலமாகக் குறிக்கப்படுகின்றன. காஞ்சிபுரத்திலுள்ள ஏகாம்பரநாதர் கோவில், திருக்கச்சி ஏகம்பம் எனவும் கைலாசநாதர் கோவில் திருக்கச்சிமேற்றளி எனவும் வெவ்வேறு தலங்களாகச் சுட்டப் படுகின்றன. தேவாரப் பாடல்பெற்ற ஒரு தலத்தினுள் வேறொரு தலமாகச் சோழநாட்டில் மூன்று உள்ளன. திருஆரூருள் திருஆரூர் அறநெறியும் திருப்புகலூரில் திருப்புகலூர் வர்த்த மானீச்சரமும் திருமீயச்சூருள் திருமீயச்சூர் இளங்கோயிலும் இவ்வாறு அமைந்துள்ளன. எனவே தலம் 264 ஆக இருந்தாலும் கோவில் எண்ணிக்கை (264+2—3) 263 ஆகிறது.

## பாடல்களில் திருமால் கோவில்கள்

நூற்றியெட்டு எனக் கூறப்படும் வைணவத் தலங்களை,

'ஈரிருபதாஞ் சோழம் ஈரொன்பதாம் பாண்டி
ஓர்பதின் மூன்றாம் மலை நாடு ஓரிரண்டாம்—சீர்நடுநாடு
ஆறோடு ஈரெட்டு தொண்டை அவ்வடநாடு ஆறிரண்டு
கூறுதிருநாடு ஒன்றாகக்கொள்.'

(அரங்க ராமானுஜதாஸன், 1977:1)

எனப் பாகுபடுத்துகின்றது பாடல். சோழநாட்டில் 40, பாண்டிநாட்டில் 18, மலைநாட்டில் 13, நடுநாட்டில் 2, தொண்டைநாட்டில் 22, வடநாட்டில் 12, திருநாடு 1—ஆக எண்ணிக்கை 108 ஆகிறது. வடநாட்டுத் தலங்கள் பன்னிரெண்டும் பரமபதம் எனப்படும் திருநாடு ஒன்றும் தவிர்த்த தமிழ்நாட்டுத் தலங்கள் 95 ஆகும்.

சைவர்கள் குறிக்கும் தலம் என்ற சொல்லுக்கு இணையாக வைணவர்கள் 'திவ்யதேசம்' எனும் சொல்லைப் பயன்படுத்துகின்றனர். பொருளிலும் ஆட்சியிலும் இவ்விருசொற்களும் ஒரு தன்மையன.

## பாடல்பெற்ற திருமால் கோவில்களின் இன்றைய நிலை

மலைநாட்டுத் தலங்களான திருவண்பரிசாரம், திருவாட்டாறு என்னும் இரண்டும் இன்றைய தமிழ்நாட்டின் பகுதியான கன்னியாகுமரி மாவட்டத்தில் உள்ளன. மீதமுள்ள பதினொரு தலங்களும் இன்றைய கேரளத்தில் இருந்தாலும் தமிழ்நாட்டுத் தலங்களாகவே கொள்ளப்படுகின்றன.

தொண்டை நாட்டின் திருக்கடன்மல்லை என்னும் தலம் குறித்து நூற்றியெட்டு திருப்பதி ப்ரபாவம் என்னும் நூலைத் தொகுத்த திருமாலடியான் அரங்க ராமாநுஜதாஸன் என்பார் இவ்வாறு எழுதுகிறார்: 'ஆழ்வார்கள் மங்களாசாசனம் செய்தருளிய சந்நதி ஒரு காலத்தில் கடலில் மூழ்கியிருக்கலாமெனத் தோன்றுகிறது. இப்பொழுது கடல் ஜலத்திற்குச் சமீபமா யுள்ளது. முன்புறத்தில் ஒரு சிவன் கோவிலும், அதற்கடுத்தாற்போல் பின்புறத்தில் புஜங்க சயனமாயிருக்கும் பெருமாள் சந்நதியும் பூஜையில்லாமல் பாழாய்க்கிடக்கின்றன. பிற்காலத்தில் ஊருக்குள் இப்பொழுது காணப்படும் பெருமாள் சந்நதியைக் கட்டியிருக்கிறார்கள். ஆகையால் இதிலிருக்கும் பெருமாளுக்கு மங்களாசாசனம் ஆகவில்லையெனத் தெரியவருகிறது. ஆனால் ஆழ்வார்களின் மங்களாசாசனமான பெருமாளின் சந்நிதி சிதலமாய்க் காணப்படுகிறது' (அரங்க ராமாநுஜதாஸன், 1977:74).

தொண்டை நாட்டின் காஞ்சிபுரத்திலுள்ள திருவேளுக்கை என்னும் ஏரியின் நடுவில் இருந்த தலம் இன்று அழிந்துவிட்டது. எனவே இவ்விரு தலங்களும் தவிர்த்த 93 தமிழகத் தலங்களே ஆய்வுக்கு அடிப்படையாகக்கொள்ளப்பட்டன.

ஒரே தலமாகக் குறிக்கப்பட்டவற்றில் இரண்டு கோவில்களும் மூன்று கோவில்களும் உள்ளன. சோழநாட்டுத் தலங்களான திருஆலி திருநகரியில் இரண்டு கோவில்களும், தஞ்சை மாமணிக் கோவிலில் நீலமேகப் பெருமாள் கோவில், மணிக்குன்றப் பெருமாள் கோவில், நரசிங்கப் பெருமாள் கோவில் என மூன்று கோவில்களும் அமைந்துள்ளன. பாண்டிநாட்டுத் திருத்தொலைவில்லி மங்கலத்தில் இரண்டு கோவில்கள் ஒரே தலமாகக்கொள்ளப்படுகின்றன. தலம் மூன்று ஆயினும் கோவில் எண்ணிக்கை 7 ஆகிறது.

காஞ்சிபுரத்திலுள்ள உலகளந்த பெருமாள் கோவிலில் திருநீரகம், திருஊரகம், திருக்காரகம், திருக்கார்வானம் என்ற நான்கு தலங்கள் அமைந்துள்ளன. ஆனால் கோவில் எண்ணிக்கை ஒன்றுமட்டுமே. கோவில் எண்ணிக்கை கணக்கிட்டால் (93+4—3) 94 ஆகிறது.

## சிவத்தலத்துள் வைணவத் தலம்

தேவாரப் பாடல் பெற்ற தலங்களுள்ளே வைணவத் தலங்கள் உள்ளன. தில்லை திருத்தலத்துள் திருச்சித்ரகூடமும், திருக்கச்சி ஏகம்பம் எனும் ஏகாம்பரநாதர் கோவிலுள் திருநிலாத்துண்டமும் சிவத்தலத்துள் அமைந்த வைணவத் தலங்களாம்.

## கள ஆய்வு

பக்திக் காலத் தாவரங்கள் எனும் ஆய்விற்காக தேவாரம், திருவாசகம், திவ்யப்பிரபந்தம் ஆகிய பக்தி இலக்கியங்களைப் படித்தபோது அவற்றுள் தலம் சார்ந்த வருணனைகள் மிகுதியாக இடம்பெற்றுள்ள நிலையை அறியநேர்ந்தது. அவ்வருணனைகளினூடே சில தலங்களுள் மரத்தின்கீழ் இறைவன் உறைவது பற்றிய குறிப்புக்கள் பாடலடிகளிலிருந்து கிடைத்தன. மரத்தின்கீழ் இறைவன் உறைவதாகக் குறிப்பிடும் இச்செய்தி பாடல் சுட்டும் குறிப்பிட்ட தலங்களின் தனிச் சிறப்பா? அன்றிப் பாடல் பெற்ற அனைத்துத் திருத்தலங்களின் பொதுப் பண்பா? என்பதை அறியக் கருதிக் கள ஆய்வு மேற்கொள்ள முடிவு செய்யப்பட்டது.

### ஆய்வுக் களன்

தேவாரப் பாடல் பெற்ற தலங்களுள் இன்று தமிழ்நாட்டினவாக முன்னர் சுட்டப்பெற்ற 267 தலங்களையும், திருவாசகத்துள் மாணிக்கவாசகர் சென்று பாடியதாகச் சுட்டப்படும் தலங்களுள் தேவாரப் பாடல் பெறாத திருஉத்தரகோச மங்கை, திருப்பெருந்துறை ஆகிய இரண்டும் சேர்க்க வரும் 269 சிவத்தலங்களையும், திவ்யப்பிரபந்தத்தில் ஆழ்வார்கள் பாடல்பெற்ற தமிழ் நாட்டின் 93 தலங்களுமாக 364 தலங்களையும் நேரில் பார்வையிட்டு, கோவில்களின் இயற்கைச் சூழல், மரத்தின்கீழ் இறை தொடர்பான செய்திகளைத் திரட்டுவதெனத் தீர்மானிக்கப்பட்டது. தலங்களுக்கு நேரில் சென்று செய்திகளைத் திரட்டி எழுதிக்கொள்ள, திறந்த வினா நிரல் (Open Questionnaire) ஒன்று தயாரித்து அச்சிடப்பட்டது.

### வினா நிரலின் அமைப்பு

வினா நிரலில் தகவல் தருபவரின் பெயர், தொழில், தலப்பெயர், இன்று வழங்கும் பெயர், இறைவன், இறைவி பற்றிய தகவல்களைத் தொடர்ந்து, தலமரம்—அதன் சிறப்பு, பழமை, பழைய மரம் அழிந்ததா அல்லது புதுப்பிக்கப்பட்டதா அன்றி அதுவாகவே அடிமரத்திலிருந்து தழைத்து வளர்கின்றதா? பழைய பட்டுப்போன தலமரத்தின் பகுதிகள் பாதுகாக்கப்படு கின்றனவா? தலமரம் கோவிலின் எந்தப் பகுதியில் உள்ளது? தலமரம் கோவிலுக்குள் வைத்துப் பாதுகாக்கப்படுவதன் காரணம், தலமரத்திற்கான வழிபாடும் அதன் காரணமும், தலமரத்தில் மருந்திற்காகப் பயன்படும் பாகம், தலமரம் தொடர்பான கதைகள் ஆகியனபற்றிய கேள்விகள் அமைக்கப்பட்டன. மரத்துடன் தொடர்புடைய ஊர்ப்பெயர்கள், சிற்பங்களில் மர உருவங்கள் போன்ற செய்திகள் தொடர்பாகவும் கேள்விகள் அமைக்கப்பட்டன. செய்திகளை விரிவாக நேரிலேயே கேட்டு எழுதும் முறையிலேயே இக்கேள்விகள் உருவாக்கப்பட்டன. 1977–79 எனும் இரண்டாண்டு கால இடைவெளியில் தலங்களைப் பார்வையிட்டுத் தகவல்கள் திரட்டப்பட்டன.

### தகவல் தந்தோர்

திருக்கோவில்களின் செயல் அலுவலர்கள், எழுத்தர், கணக்கர், மணியம், அர்ச்சகர், பரிசாரகர், மெய்க்காவல் போன்றோரிடமும் சில இடங்களில் முதிய உள்ளூராரிடமுமாக சுமார் 380 நபரிடம் கள ஆய்வின் வினா நிரலுக்கான விடைகள் பெறப்பட்டன. பெற்ற தகவல் அடிப்படையில் பார்க்கையில் அநேகருக்கு மரபுகள், தகவல்கள் முற்றிலுமாகத் தெரியவில்லை என்ற உண்மை தெளிவாயிற்று. திரட்டிய தகவல்களுள் இன்றியமையாதன மட்டுமே இந்நூலில் ஆராயப்பட்டுள்ளன. பிற தகவல்கள் அனைத்தும் அட்டவணைகளாகத் தொகுக்கப்பட்டுள்ளன. திருக்கோவில்களின் தலவரலாறு, தலபுராணம் ஆகியனவும் கிடைத்த தலங்களிலிருந்து பெற்று இவ்வாய்வில் தக்க இடங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளன.

தகவல் சேகரித்த இரண்டாண்டு காலத்துக்குப்பின் 1981இல் 30க்கும் மேற்பட்ட திருக் கோவில்களுக்குச் சென்று, தலமரங்களின் அன்றைய நிலையைத் தெரிந்துகொள்ளும் மாதிரி முயற்சி மேற்கொள்ளப்பட்டது. பழமையான சில தலமரங்கள், புதுப்பிக்கப்பட்ட தலமரங்கள், கல்லில் பொறிக்கப்பட்ட தலமரங்களின் வடிவங்கள் ஆகியனவற்றைப் புகைப்படம் எடுத்து சிறந்தவை மட்டும் இந்நூலில் தரப்படுகின்றன.

மறுமுறை பார்வையிட்ட கோவில்களுள் திருநெல்வேலி தலத்தின் தலமரமான மூங்கில் மரம் முற்றிலுமாக அழிந்தபிறகும் மீண்டும் வளர்க்கப்படவில்லை. திருக்கண்டியூரின் வில்வ மரம் புயலில் விழுந்ததால் புதிய மரம் வளர்க்கப்படுகிறது. பிற தலங்களிலும் தலமரங்களைப் பாதுகாக்கும் முயற்சிகள் சிறப்பாக நடைபெறவில்லை.

27–2–90 அன்று திருப்பரங்குன்றம் திருக்கோவிலுக்குச் சென்றபோது புகைப்படம் எடுத்திருந்த பழமையான கல்லத்திமரம் பட்டுப்போனதைக் காணநேர்ந்தது. தற்போது நந்தவனத்திற்கு வெளியே திருக்குளம் செல்லும் வழியில் புதிய செடி ஒன்று நடப்பட்டுப் பாதுகாக்கப்படுகிறது.

# தலமரங்கள்

'புவனியிற் போய்ப்பிற வாமையில் நாள்நாம்
போக்குகின்றோம் அவமே; இந்தப்பூமி
சிவன் உய்யக்கொள்கின்ற வாறுஎன்று நோக்கித்
திருப்பெருந் துறையுறைவாய்!திரு மாலாம்
அவன் விருப்பு எய்தவும் மலரவன் ஆசைப்படவும்
நின் அலர்ந்த மெய்க்கருணையும் நீயும்
அவனியிற் புகுந்தெமை ஆட்கொள்ள வல்லாய்!
ஆரமுதே! பள்ளி எழுந்தருளாயே.'

(திருவா. 346, 10)

மாணிக்கவாசகரது இக்கூற்றுப்படி தேவர்களும் புண்ணிய பூமியாகிய இம்மண்ணுலகில் பிறந்தால்தான் இறைவனை வழிபடும் வாய்ப்புக் கைகூடும். ஆதலால் அவர்கள் இப்பூமியில் வந்து இறைவனை வழிபட்டு நற்கதி அடைகின்றனர். தேவர்கள் மண்ணுலகில் வந்து வழிபட்ட தலங்கள் எண்ணிலாதன இப்பாரத பூமியில்—சிறப்பாகத் தமிழ்நாட்டில் உண்டு.

'நமது வாழ்வில் ஆராய்ந்துபார்க்கும் காலத்தில் ஒருசில இடங்கள் வேறுசில இடங்களை விட மனதிற்கு அமைதியையும் மகிழ்ச்சியையும் விளைவிப்பதைக் காணலாம். சில இடங்கள் மனம் குவிந்து தியானம் செய்வதற்கு ஏற்றதாக இருக்கும். அவ்விடங்களில் தெய்வ சிந்தனைகளும் நல்ல சமய உணர்வுகளும் பக்திநெறிப் பாவனைகளும் இயல்பாக உண்டாகும். ஆனால் வெறும் உலகியற் சிந்தனைகளும் செயல்களுமே நிகழ்கின்ற இடங்களிலும், வீண் பேச்சுக்கள், பயனற்ற பொழுதுபோக்குச் செயல்கள், வறுமொழியாளர், வம்பப் பரத்தர் போன்ற தீயவர்கள் நடமாட்டம் ஆகியன நிகழும் இடங்களிலும், மேற்குறித்தவற்றிற்கு நேர்மாறான இயல்புகளும் செயல்களும் அனுபவங்களுமே நம்மிடம் நிகழ்தலை நாம் நம் வாழ்க்கையில் கண்டுணரலாம்' (முருகவேள், 1978:10).

இத்தகைய தீய இடங்களின் வேறாக, அருள்நிறைந்து விளங்கும் அருமை பெருமை மிக்க புண்ணிய இடங்களையே திருத்தலங்கள் என்று நம் முன்னோர்களும் பெரியோர்களும் புகழ்ந்து போற்றி வந்துள்ளனர். நாயன்மார்களும் ஆழ்வார்களும் வாழ்ந்தகாலம் தமிழ் இலக்கிய வரலாற்றில் பக்திக்காலம், பல்லவர்காலம் என்றெல்லாம் குறிப்பிடப்படுகிறது. நாயன்மார்களும் ஆழ்வார்களும் இத்தலங்கள்தோறும் சென்று பாடல்கள் பாடி வழிபட்டு வந்திருக்கின்றனர்.

'தேவாரப் பதிகங்களில் பொதுப்பதிகங்கள் நீங்கலாக மற்றையவை திருத்தலங்களை ஒட்டிப் பாடப்பட்டவை ஆகும். சிவன் எழுந்தருளிய தலத்தைப் போற்றும் முறையிலும் ஒரு திருத்தலத்தை அணையும் நிலையில் அதனைச் சேய்மையில் கண்டும் அண்மையில் கண்டும் போற்றுகின்ற நிலையிலும் தலத்தினுள் புகும் நிலையிலும் எதிர்கொள்ளும் அடியார்களை ''உங்கள் பெருமான் எங்களையும் ஏற்றுக்கொள்வாரோ'' என்று வினவும் நிலையிலும் தலத்தினுள் புகும் நிலையிலும் இறைவனுக்கு உகந்த தலம் இதுவென்று உரைக்கும் நிலையிலும் தாம் கண்டு வணங்கிய எழிலையும் அங்கு எழுந்தருளிய இறைவனை வழிபடும் முறைகளையும் கூறும் வகையிலும் ஒருதலத்திலிருந்து மற்றொரு தலத்திற்குச் செல்லும் நிலையிலும் அகப்பொருட் துறையில் பக்திக் காதலைப் புலப்படுத்தும் நிலையிலும் இரட்டைத் தலங்களைப் போற்றும் வகையிலும் இறைவனது திருவருள் திறத்தால் அற்புதங்கள் விளைவித்த நிலையிலும்

பாடப்பட்ட பதிகங்களில் இயற்கைக் கூறுபாடுகள் இடம்பெற்றுள்ளன' (சிங்காரவேலன், 1969:80).

## இயற்கை வழிபாடு

மக்கள் இனம் விலங்குத் தன்மை நீங்கி, பண்பாடு பெறுவதற்குக் காரணமாய் அமைந்தன வற்றுள் இறையுணர்வு முக்கியமானதாகும். விலங்கும் பறவையும் பிறவுமாகிய இத்தாவர சங்கமத்து உயிர்கள் அனைத்தும் தங்கள் இன்ப துன்பங்களுக்குக் காரணமாய் அமைந்த மண், மரம், காற்று, தீ, நீர் முதலிய அனைத்தும் தந்த இன்பத்தையோ துன்பத்தையோ அடைவ தோடு மட்டும் நின்றுவிட்டன. உயிரினங்களைப்போன்றே இன்ப துன்பங்களை அடைந்த ஆதிமனிதனோ அதன் இயல்புகளைச் சிந்திக்கலானான். மனித ஆற்றலுக்கு மேம்பட்ட ஆற்றல் ஒன்று உள்ளது! அவ்வாற்றலே உலகிற்கு ஆக்கத்தையும் அழிவையும் செய்கின்றது என்பதை அவன் உணர்ந்தான். இந்த இறையுணர்வு, அவனுக்குத் தேவையான அனைத்துப் பொருட் களையும் தரும் நிலம், அதற்கு உறுதுணையான நீர், மரம், காற்று, தீ ஆகிய இயற்கைப் பொருட்கள் வாயிலாக உண்டாயினமையின் அவன் அவைகளையே இறைவனாகக் கண்டு, அவற்றையே வழிபடும் நிலையை உடையவனாயிருந்தான்.

## மரங்களில் இறைவன்

இயற்கை வழிபாட்டில் தமிழ் மக்களிடையே சிறப்பாக அமைந்தன மரங்கள். மரங்களில் இறைவன் தங்குவதாகப் பழந்தமிழ் மக்கள் கொண்டார்கள் என்பதற்குச் சங்க நூல்கள் சான்று தருகின்றன.

'...கடவுள் மரத்த...' (அகம். 270:12)

'...எம்மூர் வாயில் ஒண்டுறைத் தடைஇய
கடவுள் முதுமரத்து...' (நற். 83:1–2)

'...கடவுளாலத்து...' (புறம். 199:1; நற். 343:4)

இறைவன் உறைவதாகத் தாங்கள் கருதிய மரங்களுக்கு நாள்தோறும் வழிபாடு செய்தனர்.

'சுரையிவர் பொதியிலங் குடிச் சிறார்
நாட்பலி மறந்த நரைக்க ணிட்டிகைப்
புரிசை மூழ்கிய பொரியரை யாலத்து...' (அகம். 287:5–7)

அம்மரங்கள் அமைந்த இடத்தில் ஊர்ப் பொது மன்றங்கள் கூட்டப்பட்டன.

'தொன்றுறை கடவுள் சேர்ந்த பராரை
மன்றப் பெண்ணை...' (நற். 303:3–4)

ஊர்ப் பொது மன்றத்தின் மரத்தில் உறையும் இறைவன் தீயவரை அழிப்பதாகவும் அவர்கள் நம்பினர்.

'மன்ற மராஅத்த பேஎமுதிர் கடவுள்
கொடி யோர்த் தெறூஉ மென்ப...' (குறுந். 87:1–2)

## கந்து (அடிமரம்) வழிபாடு

மரத்தில் இறைவன் உறைவதாக நம்பி மரத்தை வழிபட்ட மக்கள் எஞ்சியிருக்கும் அதன் அடிமரத்திலும் (கந்து) இறைவன் உறைவதாக நம்பி வழிபாடு செய்தனர்.

'கொண்டி மகளிர் உண்டுறை மூழ்கி
அந்தி மாட்டிய நந்தா விளக்கின்
மலரணி மெழுக்க மேறிப் பலர்தொழ
வம்பலர் சேர்க்கும் கந்துடைப் பொதியில்' (பட்டினப். 246–249)

மேலே சான்று காட்டிய அடிகள், மகளிர் நீர்த்துறைகளில் நீராடி மாலைக் காலத்து நந்தா விளக்கெரியச் செய்து, மலரணிவித்துக் கந்திறுக்கு வழிபாடு செய்தமையைப் புலப்படுத்து கின்றன. இவ்வடிகளுக்கு உரை எழுதிய நச்சினார்க்கினியர் 'கந்து—தெய்வம் உறையும் தறி' என்று பொருள் கூறினார். பட்டுப்போன மரத்தின் எஞ்சிய அடிப்பாகமாகிய இக்கந்துதான் பின்னாளில் ஏற்பட்ட சிவலிங்க வழிபாட்டுக்கு அடிப்படை என்கிறார் ஜி. சுப்பிரமணிய பிள்ளை (சத்தியமூர்த்தி, 1969:81).

இன்றும் திருக்கோவில்களில் பட்டுப்போன அடிமரங்களின் பகுதிகள் பாதுகாக்கப்படுவ தும் இக்கருத்துக்கு வலிமை தருவதாயுள்ளது. தொண்டை நாட்டுத் திருப்பாதிரிப்புலியூரின் பாதிரி மரம் முழுவதையும் செப்புத் தகட்டாலும், திருஆலவாயிலுள்ள (மதுரை மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோவில்) கடம்ப மரத்தின் பட்டுப்போன அடிமரப் பகுதியை மேலும் கீழும் வெள்ளித் தகட்டாலும் மூடிப் பாதுகாக்கிறார்கள். பக்தர்கள் இதனை வலம் வந்து வணங்கு வதை இன்றும் கண்கூடாகக் காணமுடிகிறது. திருக்குற்றாலத்திலுள்ள குறும்பலாவின் பட்டுப் போன அடிமரப் பகுதிகள் தனி அறையில் பாதுகாக்கப்படுகின்றன.

## வெவ்வேறு இறைவர்க்குரிய மரங்கள்

மரத்திலும் அதன் கந்திலும் இறைவனைக் கண்ட தமிழ் மக்கள் வேறு வேறு மரங்களில் வேறு வேறு பெயருடைய இறைவர்கள் தங்குவதாகக் கொண்டனர்.

'அழல்புரை குழைகொழு நிழல்தரும் பலசினை
ஆலமுங் கடம்பு நல்யாற்று நடுவும்
கால்வழக் கறுநிலைக் குன்றமும் பிறவும்
அவ்வவை மேய வேறு வேறு பெயரோய்' (பரி. 4:66—69)

யாவரினும் பெரியோனான சிவபெருமான் ஆலமரத்தில் தங்குவதாக எண்ணினர்.

'நான்முறை முதுநூன் முக்கட் செல்வன்
ஆலமுற்றம்...' (அகம். 181:16—17)

திருமால் ஆலிலையில் பாலகனாய்ப் பள்ளி கொண்டதாகக் கருதினர்.

'ஆலமர் கடவுளன்ன நின் செல்வம்' (புறம். 198:9)

முருகனைக் கடம்ப மரத்திலும் சக்தியை வேம்பிலுங் கண்டனர். மற்றும் அரசு முதலிய மரங்களி லும் மக்கள் தெய்வங்களை வழிபட்டனர் (இராமலிங்கத் தம்பிரான் சுவாமிகள், 1970:2).

## மரத்தின்கீழ் இறைவன்

கடவுளுக்கு உருவம் கண்டு வணங்கத் தொடங்கிய காலத்திலும் மக்கள் அவ்வுருவங்களை இயற்கையில் அழகையும் நிழலையும் தருவனவாகிய மரங்களின் அடியில் வைத்தே வணங்கினர்.* மரத்தடியில் இறைவனை வழிபட்ட நிலைமாறி கல்லாலும் செங்கல்லாலும் கோவில்கள் எடுக்கும் நிலை ஏற்பட்ட பிற்காலத்திலும் அம்மரங்கள் போற்றிப் பாதுகாக்கப்பட்டன. 'தென்னகத்திலுள்ள ஒவ்வொரு தலத்திற்கும் ஒரு தல விருக்ஷம் உண்டு. நமது முன்னோர் மர நிழலில் திருவுருவம் அமைத்து வழிபட்ட அடையாளமே இன்று ஸ்தல விருக்ஷம் என்ற பெயரால் வழங்கப்பெறுகின்றது' (வரதராஜன், 1965:5). 'பழங்காலத்தில் மக்கள் மரங்களின் அடியி லேயே தெய்வங்களை வைத்து வழிபட்டனர், பின்னர் களிமண், செங்கல், மரம் இவைகளால் கோயில் சமைத்தனர்...மரங்களின் அடியில் ஆதியில் கோயில்கள் ஏற்பட்டதால் அந்த மரங் களைப் புனிதமாகக் கருதி அவைகளைத் தலவிருட்சம் எனப் பெயரிட்டழைத்தனர். அந்த மரங்களின் பெயர்களாலேயே பல தலங்களின் பெயர்கள் ஏற்பட்டன' (கலியாணம், 1970:19—20).

* எல்லா நாட்டினரும் மதத்தினரும் மரத்தைப் போற்றுவதையும் வழிபடுவதையும் குறிக்கும் செய்திகள் பல கிடைக்கின்றன என்றாலும் இந்த ஆய்வோடு தொடர்புடையதன்று என்பதால் அதுபற்றிய ஒப்புமையோ விளக்கமோ இந்நூலில் தரப்படவில்லை.

மேலே காட்டிய சான்றுகள் தலத்துக்குக் காரணமாய் அமைந்த மரங்களுக்குத் 'தலவிருட்சங்கள்' எனப் பெயரிட்டு அழைக்கப்படலாயின என்பதைத் தெளிவாக்குகின்றன. இந்நூலில் 'தலவிருட்சங்கள்' என்னும் சொல் 'தலமரங்கள்' என்றே குறிக்கப்படுகிறது.

## பக்தி இலக்கியங்களில் மரத்தின்கீழ் இறைவன்

தேவாரத்திலும் திருவாசகத்திலும் திவ்யப்பிரபந்தத்திலும் இறைவன் மரத்தின்கீழ் உறைந்ததாகக் குறிப்புக்கள் உள்ளன,

'ஆலிடை நீழலிலிருந்து சந்தினிதருள் பெருமானார்' (தேவா. 545,4:2)

'கல்லாலின் கீழறங்கள் சொல்லினான் காண்' (தேவா. 905,3:3)

'ஆல நிழலிலமர்ந் தாயமரா...' (தேவா. 1165,6:4)

'விருந்தின னாகி வெண்கா டதனிற்
குருந்தின் கீழன் றிருந்த கொள்கையும்' (திருவா. 26,60–61)

'... வியன்கான மரத்தின் நீழல்
கல்ல ணைமேல் கண்டுயிலக் கற்றனையோ...' (திவ்ய. 1131,3:3–4)

இறைவன் உறையும் மரத்தை 'தெய்வத்தரு' என ஞானசம்பந்தர் குறிக்கிறார்.

'...தெய்வத்
தரு வளரும் பொழிற் புறவஞ் சிலம்பனூர்' (தேவா. 191,2:1–2)

'தெய்வத்தரு' என்னும் இச்சொல்லாட்சியை முதன் முதலாகப் பயன்படுத்தியவர் ஞானசம்பந்தரே என்பது குறிக்கத்தக்கது. அவரே சிவபெருமான் முதுமையான மரத்தில் தங்குவதாகவும் கூறுகிறார்.

'...முதுமரமே யிடமாக வந்தடைந்த
பேய்க்காடல் புரிந்தானும்...' (தேவா. 55,2:3–4)

## தலத்தில் இறைவன் அமர்ந்த மரம்

தேவாரம், திருவாசகம் ஆகிய இலக்கியங்களுள் பல இடங்களில் இறைவன் மரத்தடியில் அமர்ந்ததாகக் குறிப்புக்கள் காணப்படினும் குறிப்பிட்ட தலத்தில் குறிப்பிட்ட ஒரு மரத்தடியில் அமர்ந்தான செய்தி அருகியே காணப்படுகிறது. தேவாரத்தில் திருஆனைக்கா, திருக்குற்றாலம், திருப்புகலூர், வடதிருமுல்லைவாயில் ஆகிய தலங்களிலும் திருவாசகத்தில் திருப்பெருந்துறையிலும் இறைவன் குறிப்பிட்ட மரத்தோடு இணைத்துச் சுட்டப்படுகிறார்.

### திருஆனைக்கா

இச்சோழ நாட்டுத் தலத்தில் வெண்நாவல் மரத்தின்கீழ் விரும்பிச் சிவபெருமான் உறைவதாக ஆறு குறிப்புக்கள் திருப்பதிகங்களுள் உள்ளன.

'...'வெணாவலின்
மேவியவெம் அழகா...' (தேவா. 430,1:3–4)

'வெணாவலுளாய்' (தேவா. 430,2:3; 3:3)

'வெண்ணாவல் விரும்பு மயேந்திரரும்...' (தேவா. 433,1:2; 7:2)

'வெண்ணாவலாரும்...' (தேவா. 433,3:3)

### திருக்குற்றாலம்

பாண்டி நாட்டுத் தலமான திருக்குற்றாலத்தில் குறும்பலா மரத்தில் இறைவன் தங்குகிறான்.

'கொம்பார் பூஞ்சோலைக் குறும்பலா மேவிய கொல்லேற்றண்ணல்'
(தேவா. 1135,11:1)

### திருப்புகலூர்

சோழநாட்டுத் திருப்புகலூரில் இறைவன் புன்னைக் கானற் சோலையில் புன்னைமர நிழலில் அமர்ந்திருக்கிறார்.

'புன்னைப் பொழிற் புகலூ ரண்ணல்...' (தேவா. 810,1:2)
'புன்னை மலர்த்தலை வண்டுறங்கும் புகலூரரசே' (தேவா. 810,2:3)
'புன்னைக் கானற் பொழிற் புகலூரனை ...' (தேவா. 811,4:3)
'புன்னைத் தாது பொழிற் புகலூரனை' (தேவா. 812,9:3)
'நறைபுலவும் பொழிற் புன்னை நன்னீழற் கீழமரும்
இறை...' (தேவா. 673,8:2–3)

### வட திருமுல்லைவாயில்

தொண்டை நாட்டுத் தலமான வட திருமுல்லைவாயிலில் முல்லைக் கொடியிடையே இறைவன் வெளிப்பட்டுத் தொண்டைமானுக்கு எல்லையில்லாத இன்பம் வழங்கினான் என்கிறது பாடல்.

'சொல்லரும் புகழான் தொண்டைமான் களிற்றைச்
சூழ்கொடி முல்லையாட் கட்டிட்
டெல்லையில்லின் பமவன் பெற வெளிப்பட்
டருளிய விறைவனே...' (தேவா. 1381–82,10:1–2)

### திருப்பெருந்துறை

திருவாசகப் பாடல்பெற்ற திருப்பெருந்துறையில் மலர் நிறைந்த குருந்த மரத்தடியில் மேவிய ஆதியே என மாணிக்கவாசகர் 10 குறிப்புக்கள் தருகிறார்.

'............திருப் பெருந்துறையில்
நிறைமலர்க் குருந்தமே வியசீர் ஆதியே' (திருவா. 409,1:3)

'.............திருப் பெருந்துறையில்
செழுமலர்க் குருந்தமே வியசீர் ஆதியே' (திருவா. 410–16,2:3; 3:3; 4:3; 5:3; 6:3; 7:3; 8:3; 9:3; 10:3)

இச்சான்றுகள் வழி ஒவ்வொரு தலத்திற்கும் ஒரு தலமரம் உண்டு என்ற செய்தி புலனாகின்றது. பாடலில் சில தலங்களுக்குரிய தலமரங்கள் பற்றிய குறிப்புகள் நேரடியாகக் காணக் கிடக்கின்றன. எனவே இந்தத் தலங்களுக்கு மட்டுமே உரியவை தலமரங்களா? அன்றிப் பாடல் பெற்ற தலங்கள் அனைத்துக்கும் தலமரங்கள் உண்டா என்ற உண்மை சோதித்து அறிய வேண்டியதாகிறது.

முன்னர்க் குறிப்பிட்ட 269 சிவன் கோவில்களுக்கும் நேரடியாகச் சென்று தகவல் சேகரித்தபோது, சோழநாடு—காவிரி வடகரைத் தலங்களுள் திருஎதிர்கொள்பாடி, திருக்கலிக்காமூர், திருச்சேய்ஞலூர், திருநின்றியூர், திருநெய்த்தானம், திருவிசயமங்கை ஆகிய ஆறு தலங்கள்; சோழநாடு—காவிரி தென்கரைத் தலங்களுள் திருஅரிசிற்கரைப்புத்தூர், திருக்கடவூர் மயானம், திருக்கருக்குடி, திருக்கோழம்பம், திருச்சக்கிரப்பள்ளி, திருச்சிராப்பள்ளி, திருத்தலையாலங்காடு, திருப்புள்ளமங்கை, திருமுக்கீச்சரம், திருவிடைவாய், திருவிளமர் ஆகிய பதினொரு தலங்கள்; தொண்டை நாட்டில் திருக்கச்சி அநேகதங்காபதம், திருக்கச்சிமேற்றளி, திருக்கச்சூர் ஆகிய மூன்று தலங்கள்; கொங்கு நாட்டின் திருவெஞ்சமாகூடல் ஆகிய இருபத்தொரு தலங்களும் தவிர்த்த அனைத்துத் தலங்களுக்குமுரிய தலமரங்கள் எவை என்பன பற்றிய செய்திகள் கிடைத்தன.

களஆய்வின்வழித் திரட்டிய தலமரங்கள் பற்றிய செய்திகளை தேவாரம், திருவாசகம் ஆகிய இலக்கியங்களுடன் ஒப்புநோக்கிப் பார்க்கையில், பிற தலப்பதிகங்களில் இரு 'இடங்களில் வேறிரு தலமரங்கள் பற்றிய செய்திகள் கிடைத்தன. திருக்குறுக்கை வீரட்டத் திருப்பதிகத்தில்,

'தழைத்த தோராத்தியின் கீழ்த் தாபர மணலால் கூப்பி
அழைத்தங்கே யாவின் பாலைக் கறந்து கொண்டாட்டக் கொண்டு
பிழைத்த தன்றாதை தாளைப் பெருங்கொடு மழுவால் வீசக்
குழைத்த தோர் அமுதம் ஈந்தார் குறுக்கை வீரட்டனாரே' (தேவா. 25,3)

என்னும் பாடலில் திருஆப்பாடியின் ஆத்தி தொடர்பான கதை நிகழ்வு சுட்டப்பட்டுள்ளது தெரியவந்தது. திருவெண்பாக்கத் திருப்பதிகத்தில்,

'...போய் மகிழ்க்கீ ழிருவென்று
சொன்ன வெனைக் காணாமே சூளுறவு மகிழ்க்கீழே
என்ன வல்ல பெருமானே...' (தேவா. 1354,9:1–2)

என்று திரு ஒற்றியூரின் மகிழமரம் பற்றிய செய்தியை அறிய முடிந்தது.

## தலவர்ணனையில் தலமரங்கள்

தலவர்ணனையிலும் பொதுவர்ணனையிலும் சில தலப்பதிகங்களில் அத்தலங்களின் தல மரம் பற்றிய குறிப்புகள் உள்ளன. இக்குறிப்புக்கள் எல்லாம் கள ஆய்வில் சேகரித்த தலமரங் களின் பெயர்களைச் சுட்டும் பாடலடிகளே அன்றி பக்தி இலக்கியங்களில் நேரடியாகத் தலமரங்கள் என்று சுட்டப்பட்டன அன்று.

**கண்டல்—திருமயேந்திரப்பள்ளி**

'கண்டலுங் கைதையுங் கமலமார் வாவியும்
வண்டுலாம் பொழிலணி மயேந்திரப்பள்ளி' (தேவா. 46,2:2–3)

**கொன்றை—திருத்துறையூர்**

'மட்டார் மலர்க் கொன்றையும் வன்னியும் சாடி
மொட்டாரக் கொணர்ந் தெற்றியோர் பெண்ணைவடபால்
கொட்டாட் டொடு பாட்டொலியோ வாத் துறையூர்...' (தேவா. 1251,6:1–3)

**கொன்றை—திருப்புத்தூர்**

'தேங்கொள் கொன்றை திளைக்குந் திருப்புத்தூர்' (தேவா. 1104,3:2)

'பொன்காட்டக் கடிக்கொன்றை மருங்கே நின்ற
புனக்காந்தள் கைகாட்டக் கண்டு வண்டு
தென்காட்டுஞ் செழும்புறவிற் றிருப்புத்தூர்' (தேவா. 1106,3:3–4)

**கோங்கு—திருநன்னிலம்**

'தவிர் தரு கோங்கு வேங்கை தடமாதவி சண்பகமும்
துளிர் தரு நன்னிலத்துப் பெருங்கோயில்...' (தேவா. 794,8:3–4)

**சண்பகம்—திருச்சிவபுரம்**

'...செண்பக மலர் பொழிற் சிவபுரமே' (தேவா. 778,4:4)

**சண்பகம்—திருத்தென்குடித்திட்டை**

'செருந்தி பூமா தவிப் பந்தர் வண்செண்பகம்
திருந்து நீள்வளர் பொழிற் றென்குடித்திட்டையே' (தேவா. 511,5:3–4)

சண்பகம்—திருநனிபள்ளி

'*சென்பகந் திகழும் புன்னை செழுந்திரட் குரவம்வேங்கை*
*நண்பு செய்சோலை சூழ்ந்த நனிபள்ளி'* (*தேவா. 643,3:3–4*)

சண்பகம்—திருநாகேச்சரம்

'*விரிதரு மல்லிகையும் மலர்ச் சண்பகமு மளைந்து*
*திரிதரு வண்டுபண் செய்திரு நாகேச்சரத்தானே'* (*தேவா. 568,8:3*)

பலா—திருக்குற்றாலம்

'*பக்கம் வாழைப்பாய் கனியோடு பலவின்றேன்*
*கொக்கின் கோட்டுப் பைங்கனி தூங்கும் குற்றாலம்...'* (*தேவா. 1133,4:1–2*)

பலா—திருவீழிமிழலை

'*தேங்கொள் பூங்கமுகு தெங்கிளங் கொடிமாச்*
*சென்பகம் வண்பலா விலுப்பை*
*வேங்கைபூ மகிழால் வெயிற்புகா வீழி*
*மிழலை....................'* (*தேவா. 736,4:3–4*)

பனை—திருஓத்தூர்

'*குரும்பை யாண்பனையின் குலையோத்தூர்...'* (*தேவா. 1319,11:1*)

பனை—திருமழபாடி

'*பாடெலாம் பெண்ணையின் பழம்விழப் பைம்பொழில்*
*மாடெலாம் மல்குசீர் மாமழ பாடியே'* (*தேவா. 409,9:3-4*)

பனை—திருவலம்புரம்

'*பனைக்கனி பழம்படும் பரவையின் கரைமேல்*
*...வலம்புரமே'* (*தேவா. 651–652,4:1–4*)

'*சடசடவிடு பெணைபழம் படுமிடவகை*
*...வலம்புரமே'* (*தேவா. 653,9:1–4*)

'*தெங்கொடு பனை பழம் படுமிடம்*
*...வலம்புரமே'* (*தேவா. 652,4:2–4*)

'*நெருங்கிய நெடும்பெணை யரும்பொடு விரவிய*
*...வலம்புரமே'* (*தேவா. 652,6:2–4*)

புன்னை—புறம்பயம்

'*புன்னைக் கன்னி களக்கரும்பு புறம்பயம்...'* (*தேவா. 340,7:4*)

புன்னை—புனவாயில்

'*புன்னை நன்மாமலர் பொன்னுதிர்க்கும் புனவாயிலே'* (*தேவா. 1108,1:4*)

புன்னை—நனிபள்ளி

'*புறவிரி முல்லை மௌவல் குளிர்பிண்டி புன்னை*
*புனைகொன்றை துன்று பொதுளி*
*நறவிரி போதுதாது புதுவாச நாறு*
*நனிபள்ளி...'* (*தேவா. 643,3:3–4*)

'*சென்பகந் திகழும் புன்னை செழுந்திரட் குரவம் வேங்கை*
*நண்பு செய்சோலை சூழ்ந்த நனிபள்ளி...'* (*தேவா. 794,8:3–4*)

புன்னை—மயிலை

'மட்டிட்ட புன்னையங் கானல் மடமயிலை' (தேவா. 1384,1:1)

புன்னை—திருமறைக்காடு

'குரவங் குருக்கத்திகள் புன்னைகள் ஞாழல்
மருவும் பொழில்சூழ் மறைக்காட்டுறை மைந்தா...' (தேவா. 1044,3:1–2)
'சுரக்கும் புன்னைகள் சூழ் மறைக் காடரே' (தேவா. 1054,10:3)

முல்லை—திருக்கருகாவூர்

'கமுத முல்லை கமழ்கின்ற கருகாவூர்' (தேவா. 516,2:3)
'கடிகொண் முல்லை கமழுங் கருகாவூர்' (தேவா. 516,4:3)
'கைதன் முல்லை கமழுங் கருகாவூர்' (தேவா. 516,5:3)
'கார்த்தண் முல்லை கமழுங் கருகாவூர்' (தேவா. 517,10:3)

மூங்கில்—திருவெண்ணெய் நல்லூர்

'வேயார் பெண்ணைத் தென்பால் வெண்ணெய் நல்லூ ரருட்டுறை'
(தேவா. 1248,2:3)

வாகை—திருவாழ்கொளிபுத்தூர்

'வாகை நுண்டுளி வீசும் வாழ்கொளி புத்தூருளாரே' (தேவா. 265,1:4)

வாழை—திருக்குடவாயில்

'குலைவாழை கமுகம் பொன்பவளம் பழுக்குங் குடவாயில்' (தேவா. 952,1:3)

வாழை—திருத்தேவூர்

வானணவு சூதமிள வாழை மகிழ் மாதவி பலா நிலவிவார்
தேனமுது வுண்டு வரிவண்டு மருள்பாடிவரு தேவூரதுவே'
(தேவா. 860,5:3–4)
'வாழை காய்க்கும் வளர் மருகனாட்டு மருகலே' (தேவா. 1528,1:4)

அட்டவணை 1

# சிவத்தலங்களும் தலமரங்களும்

| தலம் | தற்போது வழங்கும் பெயர் | தலமரம் | இறைவன் பெயர் |
| --- | --- | --- | --- |
| சோழநாடு வடகரை | | | |
| 1 திருஅன்பிலாலந்துறை* | அன்பில் | ஆலமரம் | பிரம்மபுரீஸ்வரர் |
| 2 திருஅன்னியூர் | பொன்னூர் | குருந்து | ஆபத்சகாயேஸ்வரர் |
| 3 திருஆப்பாடி | திருவாய்ப்பாடி | காட்டாத்தி | பாலுகந்தநாதர் |
| 4 திருஆனைக்கா | திருவானைக்காவல் | நாவல் | ஜம்புகேசுரர் |
| 5 திருஇன்னம்பர் | திருஇன்னம்பூர் | சண்பகம் | எழுத்தறிநாதர் |
| 6 திருஈங்கோய் மலை | திருஈங்கோய்மலை | புளியமரம் | மரகதாஜலேஸ்வரர் |
| 7 திருஎதிர்கொள்பாடி | மேலைத் திருமணஞ்சேரி | — | ஐராவதேசுரர் |
| 8 திருஐயாறு | திருவையாறு | வில்வம் | ஸ்ரீபஞ்ச நதீஸ்வரர் |
| 9 திருஓமாம் புலியூர் | ஓமாம்புலியூர் | இலந்தை | பிரணவ வ்யாக்ர புரீஸ்வரர் |
| 10 திருக்கஞ்சனூர் | கஞ்சனூர் | புரசமரம் | அக்னீஸ்வரர் |
| 11 திருக்கடம்பூர்* | மேலக்கடம்பூர்* | கடம்பு | அமிர்தகடேஸ்வரர் |
| 12 திருக்கடைமுடி | கீழையூர் | கிளுவை | கடைமுடிநாதர் |
| 13 திருக்கண்ணார்கோவில் | குறுமாணக்குடி | கொன்றை | கண்ணாயிரநாதர் |
| 14 திருக்கருப்பறியலூர் | தலைஞாயிறு | முல்லை | குற்றம் பொறுத்தீஸ்வரர் |
| 15 திருக்கலிக்காமூர் | அன்னப்பன்பேட்டை அழகு மலைக்கோயில் | — | வில்வநாதர்? |
| 16 திருக்கழிப்பாலை | — | — | — |
| 17 கீழைத் திருக்காட்டுப் பள்ளி | திருக்காட்டுப்பள்ளி | பன்னீர் | ஆரண்ய சுந்தரர் |
| 18 காவிரிப்பூம்பட்டினத்துப் பல்லவனீச்சரம் | பூம்புகார் —காவிரிப்பூம் பட்டினம் | முல்லை | பல்லவநாதர் |
| 19 திருக்காழி | சீர்காழி | பாரிஜாதம் | பிரம்மபுரீஸ்வரர் |
| 20 திருக்கானாட்டு முள்ளூர் | கானாட்டம்புலியூர் | வெள்ளை எருக்கு, அத்தி | பதஞ்சலீஸ்வரர் |
| 21 திருக்கானூர் | திருக்கானூர் | வில்வம் | கரும்பீஸ்வரர் |
| 22 திருக்குரக்குக்கா | திருக்குரக்காவல் | பலா | குந்தளநாதர் |
| 23 திருவட குரங்காடுதுறை | ஆடுதுறை | தென்னை | தயாநிதீஸ்வரர் |
| 24 திருக்குருகாவூர் | திருக்கடாவூர் | மா, வில்வம் | வெள்விடைநாதர் |

| தலமரம் | தலம் | இலை | பூ | காய் | கனி | பட்டை இளை |
|---|---|---|---|---|---|---|
| பாரிஜாதம் | திருக்களர் | | × | | | |
| | திருக்காழி | | × | | | |
| | திருத்தென்குரங்காடுதுறை | | × | | | |
| | திருக்கோட்டாறு | | × | | | |
| | திருநறையூர்ச்சித்தீச்சரம்* | | × | | | |
| பிஞ்சிலம் | திருக்கடவூர் | | × | | | |
| புரசு | திருக்கஞ்சனூர் | | | | | × |
| புன்னை | திருமறைக்காடு | | × | | | |
| | திருவேட்டக்குடி | | × | | | |
| | திருப்பாடகம் * | | × | | | |
| பூளை | திருஇரும்பூளை | × | × | | | |
| மகிழ் | திருஇராமனதீச்சரம் | | × | | | |
| | திருஅண்ணாமலை | | × | | | |
| | திருக்கண்ணமங்கை* | | × | | | |
| மந்தாரம் | திருத்திலதைப்பதி | | × | | | |
| | திருக்கானப்பேர் | | × | | | |
| மா | திருஉசாத்தானம் | | | | × | |
| மாவிலிங்கை | திருச்சேறை | × | | | | |
| | திருநாட்டியத்தான்குடி | × | | | | |
| வன்னி | திருஅகத்தியான்பள்ளி | × | | | | |
| | திருஅரதைப்பெரும்பாழி | × | | | | |
| | மேலைத்திருக்காட்டுப்பள்ளி | × | | | | × |
| | திருக்கொள்ளிக்காடு | × | | | | |
| | திருப்பெருவேளூர் | × | | | | |
| | திருமணஞ்சேரி | × | | | | |
| | திருமறைக்காடு | × | | | | |
| | திருவன்னியூர் | × | | | | |
| வில்வம் | திருஎறும்பியூர் | × | | | | |
| | திருக்கடவூர் | × | | | | |
| | திருக்கானூர் | × | | | | |
| | திருக்குடந்தைக்கீழ்க் கோட்டம் | × | | | | × |
| | திருக்குருகாவூர் | × | | | | |
| | திருச்சத்திமுற்றம் | × | | | | |
| | திருநல்லூர்ப்பெருமணம் | × | | | | |
| | திருஓணகாந்தன்தளி* | × | | | | |
| | (திருஆலி) திருநகரி* (நரசிம்மருக்கு மட்டும்) | × | | | | |

* இக்குறியிட்டவை திருமால் கோவில்களாகும்.

அட்டவணை 4

# தலமர வழிபாடு

| மரம் | தலம் | வழிபாடு—மரத்துக்கு | வழிபாடு—மரத்தடிலிங்கத்துக்கு |
|---|---|---|---|
| 1 அரசு | திருஆவடுதுறை | — | காலைசந்தி, சாயரட்சை |
| | திருச்சேறை* | நித்ய பூஜை | |
| | திருக்கச்சி* | குழந்தையில்லாதவர்கள் வலம்வந்து வணங்குகிறார்கள் | |
| | திருப்புட்குழி* | பக்தர் வலம்வந்து வணங்குகிறார்கள் | |
| | திருப்புல்லாணி* | குழந்தையில்லாதவர்கள் மரத்தடியில் நாகப் பிரதிஷ்டை செய்து வழிபடுகிறார்கள். | |
| 2 இலந்தை | திருக்கீழ்வேளூர் | காலைசந்தி, சாயரட்சை | |
| | திருஉத்தரகோசமங்கை† | பிரகார தேவதைகளுடன் தினசரி வழிபாடு. ஆடிமாதப் பௌர்ணமியில் வியாசர் பூசையில் விசேஷ வழிபாடு | |
| | திருஓமாம்புலியூர் | — | இலந்தை மரத்தடி அம்மனுக்கு காலை சந்தி, சாயரட்சை பூஜை |
| 3 உக்தாலம் | திருத்துருத்தி | கார்த்திகை கடைசி வெள்ளியன்று விசேஷ பூஜை | |
| 4 எலுமிச்சை | திருஅன்னியூர் | — | காலைசந்தி, சாயரட்சை |
| 5 கொன்றை | திருஅதிகை | காலைசந்தி, சாயரட்சைகளில் பூஜை தீபாராதனை | |
| | திருப்புத்தூர் | காலைசந்தி, சாயரட்சைகளில் நித்ய பூஜை | |

| | | | |
|---|---|---|---|
| | திருஅச்சிறுபாக்கம் | | தினமும்—பிரம்மோத்ஸவப் பத்தாம் நாள் கொன்றையடி சேவை |
| | திருத்தினைநகர் | | காலை மாலை வேளைகளில் |
| | திருஅஞ்சைக்களம் | | மரத்தடி லிங்கத்தருகே தினமும் விளக்கேற்றப்படுகிறது. |
| 6 தர்ப்பை | திருநள்ளாறு | பக்தர் வலம்வந்து வணங்குகின்றனர் | |
| 7 நெல்லி | திருநெல்லிக்கா | —— | காலைசந்தி, சாயரட்சை, அர்த்தஜாமப் பூஜை |
| 8 பலா | திருக்குற்றாலம் | காலைசந்தி, சாயரட்சை | |
| | திருவீழிமிழலை | | தினமும் |
| | திருக்கடித்தானம்* | கார்த்திகை—ரேவதி, அசுவதி, பரணி கார்த்திகை நாட்களில் விசேஷ வழிபாடு | |
| 9 பனை | திருப்பனந்தாள் | பரிவார தேவதைகளுடன் பனைமரத்துக்கும் நித்யபூஜை | |
| | திருப்பனையூர் | காலைசந்தியில் நைவேத்ய பூஜை | |
| | திருஓத்தூர் | ஆடிப்பூரத் திருவிழாக் காலத்தில் மட்டும் | |
| 10 பாதிரி | திருஆரூர் | விசேஷகாலத்தில் தீபாராதனை | |
| | திருப்பாதிரிப்புலியூர் | மரத்துக்கு அம்பாள்போல வழிபாடு | |
| 11 புன்கு | திருப்புன்கூர் | | காலைசந்தி, சாயரட்சை பூஜை |
| 12 புன்னை | திருப்புகலூர் | வைகாசி—பிரம்மோத்ஸவத்தில் 7ஆம் திருநாள் சுவாமி மரத்தடிக்கு எழுந்தருள அங்கே உச்சிக்கால பூஜை | |
| | திருப்புறம்பயம் | பக்தர் வலம்வந்து வணங்குகிறார்கள் | |
| 13 மகிழம் | திருக்கண்ணங்குடி* | காலைசந்தி, சாயரட்சை பூஜை | |
| | திருக்கண்ணமங்கை* | மார்கழி மாத உற்சவத்திற்குப்பின் 10 நாட்கள் மாலைசாத்தி வழிபாடு | |
| 14 மந்தாரம் | திருத்திலதைப்பதி | | தினமும் |
| 15 மல்லிகை | திருச்சிக்கல் | காலைசந்தியில் சுற்றுக்கோவிலுடன் பூஜை | |
| 16 மா | திருக்கச்சி ஏகம்பம் | | காலைசந்தியில் நைவேத்ய பூஜை |
| 17 முல்லை | திருக்கருப்பறியலூர் | | காலைசந்தி, சாயரட்சை |
| 18 மூங்கில் | திருநெல்வேலி | காலைசந்தி, சாயரட்சைகளில் பூஜை | |
| 19 வன்னி | திருமறைக்காடு | | தினமும் |

| | | | |
|---|---|---|---|
| | திருவான்மியூர் | | பங்குனிப் பெருவிழாவின் ஒன்பதாம் நாள் அஸ்தமன வேளையில் சிறப்பு பூஜை |
| 20 வாகை | திருவாழ்கொளிபுத்தூர் | காலைசந்தி, அர்த்த ஜாமத்தில் தினசரி பூஜை மார்கழி—சுக்கிலபட்ச சஷ்டி திதியில் வாசுகி பூஜை—மரத்தடியில் பொட்டுக்கட்டி பூஜை நடக்கிறது | |
| 21 வாழை | திருப்பைஞ்ஞீலி | | |
| | திருக்கழுங்குன்றம் | சித்திரை 5ஆம் நாள் உற்சவத்தில் சுவாமி கதலி விருக்ஷவாகனத்தில் பவனி | |
| 22 வில்வம் | திருக்கண்டியூர் | வைகாசி விசாகத்தில் சுவாமி மரத்தடிக்கு எழுந்தருள வழிபாடு. பக்தர் வலம் வருகின்றனர் | |
| | திருவைகாவூர் | சிவராத்திரியில் மரப்பீடத்தில் அபிஷேக ஆராதனைகள் | |
| | திருமாற்பேறு | | காலைசந்தி |
| | திருக்குடந்தைக்கீழ்க் கோட்டம் | | நாகர், வினாயகர், சண்டிகேஸ்வரர் சிலைகள் உள்ளன; காலைசந்தி பூஜை |
| 23 வேம்பு | திருவாட்போக்கி | காலைசந்தி பூஜை | |
| | திருப்புள்ளிருக்குவேளூர் | | காலைசந்தி, உச்சிக்காலம், சாயரட்சை |

* இக்குறியிட்டவை திருமால் கோவில்கள்

† இக்குறியிட்டது திருவாசகக் கோவில்

இலுப்பை—திருமண்ணிப்படிக்கரை

இறைவன் அமர இத்தலமரமான இருப்பை (இலுப்பை) நிழல்தந்து மலர் சிந்தி நிற்கும்.

'அம்ம தூகத்தைக் கண்டவர் பெரிதற மடைவார்
அம்ம தூகத்தைத் தொழுதவர் பெரும்பொரு ளடைவார்
அம்ம தூகத்தைச் சூழ்ந்தவ ரின்பமிக் கடைவார்
அம்ம தூகத்தைத் தியானித்தோர் முத்தியு மடைவார்.'

(மீனாட்சி சுந்தரம்பிள்ளை, 1956:29)

உத்தாலம்—திருத்துருத்தி

ஆண்டுதோறும் மார்ச், ஏப்ரல் மாதங்களில் பூக்கும் இம்மரத்தின் பூ தித்திப்பாக இருக்கும். அபூர்வமாகக் காய்க்கும். இம்மரம் காய்த்தால் நன்மை அல்லது தீமை ஏற்படும் எனவும் நம்பப்படுகிறது. 'பெருமான் அம்மையாரைத் திருமணஞ் செய்ய எழுந்தருளிய காலத்து அப்பெருமான் ஆணைப்படி நிழல் செய்துகொண்டு உடன் வந்தது. இத்தலத்திற்கு வந்ததும் பெருமான் அதனை இடது பாகத்தில் நிறுத்தி அதன் கீழ்ப்பாகத்தில் வேதமாகிய பாதுகையில் தாமும் எழுந்தருளினார் (திருத்துருத்தித் தலவரலாறு, 1958:18).

எருக்கு—திருஎருக்கத்தம்புலியூர்

இதன் பூ இறைவழிபாட்டிற்கு மட்டுமே பயன்படுத்தப்படுகிறது. திருவிழாவின் ஐந்தாம் நாளில் தன்னைத்தானே பூசித்தல் என்னும் நிகழ்ச்சிக்கு இப்பூவே பயன்படுகிறது.

காட்டாத்தி—திருச்சிற்றேமம்

'இத்தலத்துக்குரிய மரம் ஆத்திமரம். அம்மரம் குடைவிரித்தாற்போன்று வெயிலால் களைப்புற்று வருவார்க்கு இன்னிழலீந்து நிற்கும் இனிய தருவாக அமைந்துள்ளது. இம்மரம் பன்னூற்றாண்டுகளாக அழியாச் சின்னமாக விளங்குகிறது. அண்மையில் ஏற்பட்ட புயலால் சிதைந்தும் மீண்டும் புதுமைப் பொலிவுடன் திகழ்கிறது (சிவநேசன், 1975:5).

காட்டாத்தி—திருச்செங்காட்டங்குடி

'இம்மரத்தடியில் சிறிது நேரமாவது பதுமாசனத்தில் இருந்து சிவத்தியானத்துடன் ஸ்ரீபஞ்சாக்சரத்தை 1008 உருச்செபஞ்செய்யின் இம்மையில் எண்ணியாங்கு எய்தலாம். மறுமையில் வீடுபேறும் கிடைக்கும். இன்றும் மனக்குறையுடைய பலரும் இங்கு வந்து வழிபட்டுத் தியானம் செய்து செல்வது வழக்கமாக நடந்துவருகிறது' (தண்டபாணி தேசிகர், :23–24).

தென்னை—திருவடகுரங்காடுதுறை

கோவிலின் தலமரமாகத் தற்போது காட்சிதரும் இரண்டு மரங்களும் ஒரே காயிலிருந்து தோன்றியன.

நாவல்—திருஆனைக்கா

தலமரமான நாவலின் அடிமர அளவும் கர்ப்பக்கிரக அளவும் சமமாக உள்ளது என்று கூறுகின்றனர்.

பலா—திருப்பூவணம்

இத்தலமரமான வேர்ப்பலா ஆண்டுக்கு ஒரு பழம்தான் பழுக்கும். ஒன்றுக்குமேல் பழுத்தால் ஊரில் நன்மை அல்லது தீமை ஏற்படும்.

பலா—திருக்குற்றாலம்

பழைய மரம் பட்டுப்போனதால் புதிய மரம் சுமார் 30 ஆண்டுகளுக்கு முன்னர் வைக்கப் பட்டது. இம்மரத்தின் பழத்தை மனிதர் பயன்படுத்துவது இல்லை. நான்கு கூறுபடும் வேதம் மரமாக, அதன் மூலமாகிய பிரணவம் மரத்தின் வேராக, கருமஞான கண்டங்கள் என்னும் பகுப்புகள் பெருங்கவடுகளாக, சுருதிகள் எல்லாம் பருத்த கிளைகளாக, சாகைகள் பசிய இலை களாக, உபநிடதம் தளிராகப் பொருட்கருக்கொண்டு அறமுதல் நாற்பெரும் பொருளும் குறும் பலாவே தருவதாயிற்று என்று திருக்குற்றாலத் தலபுராணம் குறிப்பிடுகின்றது.

'ஆகையாற் சதுர்வேதந் தருவாக மூலமதன் மூலமாகப்
பாகையா னவையிரண்டுங் கவராகச் சுருதியெலாம் பணைகளாகச்
சாகையா னவைபசிய சாகையா வுபநிடதந் தளிராச்சூல் கொண்
டோகையார் தருமமுதற் பெரும்பலவுங் குறும்பலவே யுதவு மாதோ.'
(திரிகூடராசப்பக்கவிராயர், 1973:133)

வேதவடிவான அப்பலா மரநிழலில் வந்து தங்குபவர் அநேக நன்மை பெறுவர்.

'அப்பலவின் வடிவுசதுர் வேதவடி வாதலினா லதன்பா லாக
எப்பலதே வருமிருக்கு மியல்பினா லொருகுடநீ ரிதன்பால் வார்க்கில்
செப்பரிய தேவருக்கு மூவருக்கு மபிடேகஞ் செய்ததாகும்
கொப்பலரு நீழலிடை யுருச்செபு மந் திரங்களொன்று கோடியாமால்.'

'ஓதரிய திரிகூடச் சாரலுறை குறும்பலவி லுந்தி பூத்த
மாதவனா மம் புகழ்வார் வைகுத்த பதத்திலென்றும் வைகிவாழ்வார்
வேதபா ராயணஞ்செய் வேதியர்க ளரன்கயிலை வெற்பிற் சேர்வார்
ஏதுமோர் மகம்புரிவா ரிந்திரன்போற் சதமகப்பே றெய்து வாரே.'
(திரிகூடராசப்பக்கவிராயர், 1973,133)

பனை—திருப்பனந்தாள்

இத்தலத்தில் '...இரண்டு மரங்கள் இருக்கின்றன. இரண்டில் ஒன்று ஆண் பனை; மற்றொன்று பெண் பனை. இதன் பக்கலில் தாடகையின் அன்புக்கிரங்கி அருள்பாலித்த மூர்த்தம் இருக்கின்றது.' (திருப்பனந்தாள் தல வரலாறும் கும்பாபிஷேக மகத்துவமும், 1968:12)

பனை—திருப்பனையூர்

'துணையிருந்த விநாயகர் கோவிலுக்குப் பின்புறம் ஆண், பெண் ஆகிய இரண்டு பனை மரங்கள் எழுந்துள்ளன. தலமரமாகவும் வழிவழி மரபாகவும் தொடர்ந்து தோன்றி வளர்ந்து நிற்கும் இப்பனைகளின் வளர்ச்சியில் ஒரு புதுமையும் தெய்வீகமும் இருந்து வருகின்றது. பனைக்கு வயது ஆயிரம் என்பது உலக வழக்காயினும் இப்பனைகள் வளர்ந்து முதிர்ச்சியடையும் காலத்தில் மரபு மறையாததாக, வித்திட்டு முளைக்காததாக, இரண்டு பனைகளின் அடியிலும் முறையே ஆண் பெண் வாரிசு மாறாமல் வேர்க் காலிலிருந்து பனங்கன்றுகள் தோன்றி வளர்ந்து வருகின்றன. இத்தெய்வீக நிலையினை இன்றும் காணலாம். இது மட்டுமல்ல, ஆண் பனை பெருமிதமாக உயர்ந்து பூவுடன் பொலிவுற்று நிற்க, பெண் பனை உயரத்தில் குறைந்து தோற்றத்தில் அழகுடன் காயுடன் கனிந்து நிற்பது சிந்தைக்கு விருந்தானதாகும். இப்பனை மரமானது பல பிணிகளையும் போக்கி உயிர்வளர்க்கும் கற்பக மரமாகும். அதனால் இதனை ஒரு மண்டலம் வணங்கப் பல பிணிகளும் நீங்கி நல்வாழ்வு ஏற்படும்' (கோவிந்தராசனார், 1970:9). இன்று இரண்டு மரங்களினடியிலும் ஆண் வாரிசுகளே உள்ளன.

பனை—திருஓத்தூர்

ஆண் பனை பெண் பனையாக ஞானசம்பந்தர் பாடலால் மாறிய இத்தலத்தில் இன்று நான்கு பெரிய மரங்களும் இரண்டு கன்றுகளும் பிரகாரத்தில் சுவாமி சந்நதிக்கு வடமேற்கில் உள்ளன.

பாதிரி—திருப்பாதிரிப்புலியூர்

இம்மரத்தின் பூ வாசனையுடையது; பூவை நீரில் இட்டு வைக்க நீர் குளிர்ச்சியடையும்; சித்திரை வைகாசி மாதத்தில் பூக்கும். இத்தல மரமான பாதிரி பன்னிரு வகையான பூக்களைப் பூத்ததாகக் கலம்பகமும் புராணமும் கூறுகின்றன. தெய்வத்தன்மை பொருந்திய இப்பாதிரி மரம் அன்னை அதனடியில் பூசை செய்த காலத்து அன்னையின் பூசைக்கு வேண்டும் பொருட்கள் பலவற்றையும் பலவகைப் பூக்களையும் தந்தது.

'அன்னை அருந்தவம் செய்கின்ற காலத் தருநிழலாய்க்
கன்னி வனத்தி லொரு பாதிரி கைதை செங்கழுநீர்
மன்னு மலர்க் கொன்றை செண்பகங் கோங்குடன் ஞாழல்மத்தம்
புன்னை நறும்பிச்சி வெள்ளெருக் கம்புயம் பூத்ததுவே.'

(திருப்பாதிரிப்புலியூர்க் கலம்பகம்—காப்பு :9)

'பன்னிரு பூமலர் பாதிரிக் கணே...' (திருப்பாதிரிப்புலியூர்த் தல வரலாறு, 1976:21)

திருப்பாதிரிப்புலியூரில் விளங்கும் பாதிரி தனிச்சிறப்புடைய மரமாகும்; நாதகலையே அதன் வேர்; ஐந்து சக்திகளே அதன் திருவுடல்; நான்கு வேதங்களே தழைகள்; ஆகமங்களே அதன் பூக்கள்; மேலாகிய மந்திரமாம் ஐந்தெழுத்தே பூமணம்; அகண்ட ஆகார வடிவாகிய வெளியெலாம் அதனிடத்தே உண்டாவதே; அதனிடம் வீசுவதோ சுத்த மணமாகிய சிவஞானம் என்று தலபுராணம் குறிப்பிடுகிறது.

'நாதம் மூலம் பஞ்சசத்தி மேனியாக நயந்து நால்
வேதம் தழைத்து ஆகமம் பூத்து விமல பஞ்சாக்கர மணமாய்ச்
சோதி அகண்டாகார சுகோதயமாய்ச் சுத்தநற விரிக்கும்
போத உருவாம் பாதிரியைப் புகழ்ந்து போற்றி வணங்குவாம்.'

(திருப்பாதிரிப்புலியூர் தல வரலாறு, 1976:32)

பிஞ்சிலம்—திருக்கடவூர்

பிஞ்சிலத்தின் மலர்களால் அமிர்தகடேஸ்வரரை அர்ச்சனை செய்பவர்கள் சகல சித்திகளையும் அடைகிறார்கள். இதன் ஒரு மலரால் அர்ச்சனை செய்வதற்கு பிற நூறு மலர் அர்ச்சனைப் பலன் உண்டு என்று கூறுகின்றனர்.

புரசு—திருக்கஞ்சனூர்

'அம் மரத்தின் நிழலில் தங்கினால் மோக்ஷம் கைகூடும். அதை ஒருமுறை ஆலிங்கனம் செய்தால் குபேர சம்பத்து வரும்' (வெள்ளை வாரணம், 1964:5). பிள்ளையில்லாதவர்கள் ஒரு மண்டலம் வலம் வந்தால் ரோகநிவிர்த்தியும் பிள்ளைப் பேறும் உண்டாகும்.

புன்கு — திருப்புன்கூர்

பிள்ளையில்லாதவர்கள் தலமரமான புன்கு மரத்தில் துணியில் கல்கட்டியிடப் பிள்ளை பிறக்கும் என்று நம்புகிறார்கள்.

புன்னை —திருப்புகலூர்

'இத் தலமரமான புன்னை கோவிலின் உள் பிரகாரத்தின் வடபகுதியில் உள்ளது. இப் புன்னையின் இலை, தளிர், பூ, அரும்பு முதலியவற்றைக் கிள்ளினும் மரத்திற்கு ஊறு செய்யினும் அவர்களை விட்டுத் திருமகள் நீங்குவாள்!' (தண்டபாணி தேசிகர், 1973:12).

புன்னை—திருமறைக்காடு

இத் தலமரமான புன்னையின் காயில் பருப்பு இல்லை.

மா—திருநாகைக் காரோணம்

இத்தலத்தின் மாமரத்தின் இரண்டு கிளைகளிலும் இரண்டுவிதமான சுவையுடைய பழங்கள் உள்ளன என்று கூறுகிறார்கள்.

மா—திருக்கச்சி ஏகம்பம்

'மாவடி—இம்மரவடியே இத்தலத்தின் தனிச்சிறப்பாகும். வேதமே மாமரம். இதன் வேர் மகாமாயை வடிவமாயிருப்பது. 4 வேதங்களும் 4 கிளைகளாகத் தழைத்து விளங்குகின்றன. இம் மாமரம் அளவில் மிகப் பெரியதாகத் தோற்றமளிக்கினும் இது ஒற்றை மாமரமே என்பது குறிப்பிடத்தக்கது. இத்தலத்தின் அழகுச் சின்னமாக—தெய்வீக அடையாளமாக விளங்குவதும் இதுவே. இம்மாவடியின்கீழ் ஆனந்தப் பேரொளியே சிவலிங்கமாகத் தோன்றிற்று. இம்மரம் வேத சொரூபமாதலின் இதன்மேல் ஏறுவதற்கு எவரையும் அனுமதிப்பதில்லை. இம்மாவடி சிறந்த பிரார்த்தனை இடமாகவும் திருமணங்கள் செய்வதற்குரிய சிறப்பிடமாகவும் விளங்கி வருகிறது' (ஜெயசெந்தில் நாதன், 1975:12—13).

'இம்மாமரத்தின் வேர் மேலாகவும் கிளை கீழாகவும் பாவித்தவர்கள் மோட்சத்தை அடைவார்கள். கம்பையாற்றின் கரையில் வேதமே மாமரமாக விளங்குகின்றது. மற்றைப் பதினான்கு வகையான கல்வியும் அதன்மேல் மல்லிகைக் கொடியாகப் படர்ந்திருக்கின்றன. அவ்வித்தைகட்குத் தலைவியான காமாட்சி கொடிக்கு இனியவளாவாள். மாமரத்திற்கு யாம் உரிமையுடையோம். வேதம் நம்மையுணர்த்தும் வாசகமாதலால் வாசகத்திற்கும் வாச்சியத் திற்கும் வேறுபாடின்மையால் இம்மாமரத்திற்கும் நமக்கும் வேற்றுமை இல்லை...என்று காஞ்சிப்புராணம் குறிப்பிடுகின்றது (அருணை வடிவேல் முதலியார், 1977:178—179).

வன்னி—திருப்பாச்சிலாச்சிரமம்

'...ஒரு வன்னிமரம் மட்டும் அம்மையார் ஆலயத்தின் முன்னே அன்னமாம் பொய்கைக் கரையின் அருகு தழைத்து விளங்குகிறது. இவ்வன்னி மரத்தின் அடிப்பாகம் பிரமன் வடிவும், மத்திய பாகம் விஷ்ணு வடிவும், கிளைகள் உருத்திரமூர்த்தி வடிவும் ஆகும். ஆகவே இவ்வன்னி மரம் திரிமூர்த்தி வடிவம் உடையது. இதனை வழிபட்டோர், இதன் பத்திரத்தை (இலையை) இறைவர்க்குச் சாத்திப் பூசித்தோர் விரும்பிய வரங்களைப் பெறுவர் என நூல்கள் கூறும் (பட்டுச்சாமி ஓதுவார், 1971:9).

வன்னி—திருமறைக்காடு

இத்தல வன்னி மரத்தைச் சுற்றிவந்தால் தோஷங்கள் நீங்கும்; திருமணம் ஆகாதவருக் குத் திருமணம் ஆகும்; பிள்ளையில்லாதவருக்குப் பிள்ளை பிறக்கும் என்ற நம்பிக்கை நிலவுகிறது.

வாழை—திருத்தேவூர்

'வெளிப் பிரகாரத்தில் சுவாமி சந்நதிக்குத் தென்புறம் கட்டுமலை மீது வாழை வளர் கிறது. தண்ணீர் விடுவதில்லை என்றாலும் செழிப்பாக வளர்கிறது. கோயிலுக்கு வெளியே வளர்வதில்லை. வாழை மரம் தலவிருட்சமாகவுடைய தலங்களுள் இது ஒன்று. இங்கு வாழை கட்டுமலைமேல் விளைவது ஆச்சரியமாகும் (திருத்தேவூர்த் தலவரலாறு, 1944:3).

வாழை—திருப்பைஞ்ஞீலி

ஞீலி எனப்படும் ஒருவகை வாழையே இக்கோவிலுக்குரிய தலமரமாகும். இவ்வூர் மக்கள் இதனைத் தெய்வமாகப் போற்றுகின்றனர். இவ்வாழை தனியினமாக உள்ளது. வேறிடங் களில் பயிராவதில்லை என்றும் வேறு வாழைகளைக் கொண்டுவந்து கோவிலில் பயிரிடுவதில்லை என்றும் கூறப்படுகிறது. இவ்வாழையின் கனியைச் சுவாமிக்கு அபிஷேகம் செய்து தண்ணீரில் விட்டுவிடுவார்கள். அக்கனிகளை யாரும் உண்பதில்லை (திருப்பைஞ்ஞீலி—திருப்பாச்சிலாச் சிரத் திருப்பதிகங்கள், 1977:13—14).

வாழை—திருமருகல்

வடக்கு உட்பிரகாரத்தின் மதிலருகே உள்ள தலமரமான வாழை, மலை வாழை இனத் தைச் சார்ந்தது. சிறியதாகத்தான் வளரும். கோயிலுக்கு வெளியே வளர்வதில்லை என்று கூறுகிறார்கள்.

**வில்வம்—திருவெண்காடு**

இத்தலமரமான வில்வத்தில் முள் காணப்படவில்லை.

**வில்வம்—திருஇடைச்சுரம்**

வில்வ மரம் சாதாரணமாக முக்கூட்டிலை (மூன்று தளம்) உடையது. இத்தலத்தில் தல மரமான வில்வமர இலைகள் எட்டு பகுதிகளின் (எட்டு தளம்) கூட்டிலையாக அமைந்துள்ளன. இதனை பிரம்ம வில்வம் என்று கூறுகிறார்கள்.

**விழல்—திருவிளநகர்**

மனக் கவலை நீங்க இத் தலமரமான விழல் புல்லில் முடி போடும் பழக்கம் நிலவுகிறது.

**வேம்பு—திருப்புள்ளிருக்கு வேளூர்**

பிள்ளைப் பேறில்லாதவர்கள் தல மரத்தில் தூளி கட்டிப்போட, பிள்ளை பிறக்கும் என்ற நம்பிக்கை நிலவுகிறது.

## திருமால் கோவில் தலமரங்கள்

**அரசு—திருக்கச்சி**

இத் தலமரமான அரச மரத்தை வலம் வந்து வழிபட்டால் பிள்ளைப்பேறு இல்லாதவர் களுக்குப் பிள்ளைச் செல்வம் ஏற்படும் என்று நம்புகிறார்கள்.

**அரசு—திருப்புல்லாணி**

இத் தலமரமான அரச மரத்தின் கிளை தானாகவே வளைந்து மண்ணில் ஊன்றிப் புதிய மரமாக வளர்கிறது. தற்போது காணப்படும் பெரிய மரம் சுமார் 40 ஆண்டுகளுக்கு முன்னர் பழைய மரத்தின் கிளை தரையில் ஊன்றியதால் தோன்றியது. சிறிய மரம் சுமார் 10 ஆண்டு களுக்கு முன் தற்போது காணப்படும் பெரிய மரத்தின் கிளையிலிருந்து தோன்றியது.

'இம்மரத்தின் இலைகள் மற்றைய அரச மரங்களின் இலைகளைப்போல் இல்லாமல் காம்பு நீண்டும் இலை சிறுத்தும் அதே இலையின் நுனிப்பகுதி நீண்டும் இருக்கிறது. இவ் வமைப்பு இம்மரத்தைப் பார்ப்பவர்களின் மனதைக் கவருவதாக நிச்சயமாக இருக்கும். வட நாட்டில் 'கயா' என்ற இடத்தில் உள்ள ஆலமரத்தினடியில் செய்யும் வைதிகச் சடங்கைப்போல், இங்கு இம்மரத்தினடியில் நாகப் பிரதிஷ்டை செய்வது மிகச் சிறப்பாம் (தாதாச்சாரியார், 1974:61).

'...புத்திரப் பேறு இல்லாதவர்கள் இத்தலத்திலுள்ள மூர்த்தியை வணங்கிப் பகவானத னடியில் அர்ச்சாரூபியாய் அமரப் பாக்கியம் பெற்ற பரிசுத்தமான அரச விருக்ஷதின் நிழலில் நாகப் பிரதிஷ்டை செய்து நிவேதனம் செய்த பாயசத்தை அருந்தினால் புத்திரப் பேறு கிடைப் பது பிரசித்தம்' (திருப்புல்லாணித் தலக்குறிப்பு: 2).

**புளி—திருக்குருகூர்**

கோவிலுள் வடக்குப் பிரகாரத்திலுள்ள ஏழு கிளைகளுடன் காட்சி தரும் புளிய மரமே, தலமரமாகும். ஏழு கிளைகளும் ஏழு தனி மரங்களாகக் காட்சி தருகின்றன. இதனை ஆதி சேடனின் அவதாரம் என்று கூறுகிறார்கள். உறங்காப் புளியான இதன் இலை, பிற மரங் களைப்போல மூடாது. பூ, காய் தோன்றும்; ஆனால் கனிவதில்லை. மரம் தனியாகப் பாதுகாக்கப்படுகிறது.

**மகிழ்—திருக்கண்ணங்குடி**

'ஸ்தல விருட்சம்: மகிழமரம் (மங்களம் என்று இதனை ஸ்தல புராணம் கூறும்), இதன் நிழலில் அமர்ந்தவர்களது குஷ்டநோய்கள் அகலும். அவர்களது உடல் பொன்போல்

மி ளிரும் என்கிறது புராணம்.* 'கிருஷ்ணாரணியம் (திருக்கண்ணங்குடி) என்ற தலத்தில் மிகவும் புண்ணியமான சிவபுஷ்கரிணி உள்ளது. இக்குளத்தின் கிழக்கே மிகவும் புனிதமான மகிழமரம் உள்ளது. இந்த மரத்தின் நிழலில் தங்குகிறவர்களுக்கு நோய் எல்லாம் போகும். வெண் குஷ்டம் போன்ற நோய்களும் குணமாகும். அதன் நிழலில் தங்கினவர்களிடம் திருக்கண்ணங் குடிக் கண்ணன் அருள் பொழிவார். இம்மரத்தின் தெற்கில் முனிவர்கள் ஆசிரமம் அமைத்து இத்தலப் பெருமானை வழிபட்டு வந்தார்கள். திருமகள் நாதனை இந்த மரத்தடியில் வேள்வி செய்து வழிபட்டால் அளவற்ற பலன் ஏற்படும்' (தாத்தாச்சாரியார், 1972,4:55-56). 'காயா மகிழ்' என்று அழைக்கப்படும் இம்மரம் பட்டுப் போகாதது.

**மா — திருச்சிரீவர மங்கை**

இத் தலமரமான மாமரத்தின் காய்கள் சிறு நெல்லிக்காய் அளவிற்கு மேல் பருப்பதில்லை என்று கூறுகிறார்கள்.

மேலே சுட்டிய செய்திகள் அனைத்தும் வெளிப்படையாகத் தெரியும் சிறப்புக்களும் அவை பற்றிய நம்பிக்கைகளுமேயாகும். தல மரங்களின் அடியில் வழிபாடு செய்வதால் நோய் அகலும், முக்தி கிடைக்கும் என்றெல்லாம் கூறப்படும் பயன்கள் தெய்வம் உறையும் இடமாதலால் அவ் விடத்தில் செய்யப்படும் வழிபாடு, தானம் ஆகியன சித்தி பெறும் எனவும், தலமரத்தின் வழிபாடு அதில் உறையும் இறைவனை வழிபடுவதை நிகர்த்தது என்ற எண்ணமே ஏற்படுகின்றது.

## இயற்கை வினோதங்களைப் பாதுகாக்கும் முயற்சியா?

திருநெடுங்களத்தின் அரளியில் மூன்று நிறப் பூக்கள் பூப்பது, திருஅன்பிலாலந்துறையின் ஆலமரத்தின் இலைகள் பின்புறம் மடங்கி விழுதுகள் இன்றி இருப்பது, திருவட குரங்காடு துறையின் தென்னைகள் ஒரே காயினின்று தோன்றியது, திருப்பூவணத்தின் பலாமரம் ஆண்டுக்கு ஒரே பழம் மட்டும் பழுப்பது, திருமறைக் காட்டின் புன்னைக்காயில் பருப்பு இல்லாமல் இருப்பது, திருநாகைக் காரோணத்தின் மாவில் இரண்டு சுவையுடைய பழங்களும், திருக்கச்சி ஏகம்பத்தின் ஏக ஆம்ரம் எனும் ஒற்றை மாமரத்தில் நான்கு கிளைகளிலும் நான்கு சுவையுடைய பழங்களும் தோன்றுவது, திருவெண்காட்டின் வில்வமரம் முள் இன்றிக் காணப்படுவது, திரு இடைச் சுரத்தின் வில்வத்தில் எட்டு பகுதிகளைக் கொண்ட கூட்டிலை காணப்படுவது, திருப்புல்லாணி யின் அரச மரத்தின் கிளை வளைந்து தானாகவே தரையில் படர்ந்து வளர்வது, திருக்குருகூரின் புளிய மரத்தின் இலை இரவில் மூடாமல் இருப்பது என்பன எல்லாம் இயற்கையில் ஏற்படும் வினோதங்களேயாகும். இயற்கையில் தோன்றும் இவ்வித அதிசயங்களை அறிவியல் அடிப்படை யில் ஆராயும் திறன் இல்லாத நம் முன்னோர் அவற்றைக் கடவுட் செயலாகக் கருதினர். இந் நாளில் காட்சி சாலைகளில் பாதுகாப்பது போன்று அவற்றைச் சார்ந்து கோவில்களை ஏற்படுத்தி யும் சில இடங்களில் கோவிலருகே அவற்றை நட்டும் பாதுகாக்க முற்பட்டனர்.

## உக்தால மரம்

சோழ நாட்டில் திருத்துருத்தி என்ற தலம் தற்போது ஆடுதுறை—குற்றாலம் என வழங்கப்படுகிறது. இத்தலத்தின் தலமரம் உக்தால மரம் என்றழைக்கப்படுகிறது. இம்மரம் அபூர்வமாகத்தான் காய்க்கும் எனவும். அங்ஙனம் காய்த்தால் நன்மை அல்லது தீமை ஏற்படும் என்றும் கூறப்படுகிறது. இம்மரத்தின் பூங்கொத்தினை ஆராய்ந்து பார்த்தபோது மகரந்தக் கேசரங்களையுடைய ஆண் பூக்களே மிகுதியாகக் காணப்பட்டன. தாவர இயல் அறிஞர்கள் இத் தாவர விளக்கம் கூறுகையில் பூக்கள்—ஆண் பெண் உறுப்புக்களைக் கொண்டதாகவோ ஆண் உறுப்பு மட்டுமோ அன்றிப் பெண் உறுப்பு மட்டுமோ கொண்டதாகவோ இருக்கும்* என்றே கூறுகின்றனர். ஆண் பூ அல்லது பெண் பூ காணப்படும் மரத்திலும் ஆண் பெண் உறுப்புக்களை உடைய மலர்கள் ஏற்படுவதுண்டு. அங்ஙனம் ஏற்படும்போது அம்மலர்களில் காய் தோன்றுவது

* Flowers—Polygamous or dioceous (Gamble, 1967:53).

உண்டு. அபூர்வமாக இம்மரம் காய்க்கும்போது ஊரில் சாதாரணமாக ஏற்படும் அரசியல் மாற்றங்கள், மரணம் போன்ற நிகழ்ச்சிகளை அத்துடன் தொடர்புபடுத்திக் கூறுகிறார்கள் என்றே எண்ணத்தோன்றுகிறது. அறிவியல் முறைப்படி தாவரவியலார் இவற்றில் காணப்படும் சிறப்புகளை ஆய்ந்து தெளிவுபடுத்துவதன் வாயிலாக அது பொதுத்தன்மையா அல்லது குறிப்பிட்ட மரத்திற்கு மட்டுமே உள்ள சிறப்புத் தன்மையா என்பதை அறிய இயலும்.

### பழமையான தலமரங்கள்

தலமரங்களில் பல பழமையானவை என்று கூறுகிறார்கள். இவற்றையெல்லாம் மர வல்லுநர்கள் கணக்கிட்டுக் கூறினால் மட்டுமே உண்மை எனக் கொள்ளமுடியும். ஏனெனில் இவை வெறும் மரபுக் கருத்துக்களாகவும் இருக்கலாம்.

### சிவன் கோவில்கள்

பாடல் பெற்ற சிவன் கோவில்களுள் திருமாணிகுழியின் கொன்றை மரம் சுமார் 1000 ஆண்டுகளுக்கு மேலாகவும், திருப்புத்தூரின் கொன்றைமரம் சுமார் 1350 ஆண்டுகளுக்கு மேலாகவும் அத்தலங்களில் உள்ளன. திருப்புனவாசலின் புன்னை மரம் சுமார் 1200 ஆண்டுகளுக்கு மேலானது. திருக்கச்சி ஏகம்பத்தின் மாமரம் சுமார் 3500 ஆண்டுகளுக்கு மேலாக உள்ளது என அதன் பழமையை ஆய்ந்தவர்கள் முடிவு கூறுகிறார்கள்.*

### திருமால் கோவில்கள்

திருமால் கோவில் தலமரங்களுள் திருக்கண்ணங்குடியின் மகிழமரமும் திருக்குருகூர் என்னும் ஆழ்வார் திருநகரியின் புளிய மரமும் மிகப் பழமையானவை என்று கூறுகிறார்கள். திருக்கண்ணங்குடியின் 'காயா மகிழ்' சுமார் 1000 ஆண்டுகளுக்கு மேல் பழமையானது. ஆழ்வார் திருநகரியின் கோவிலுள் வடக்குப் பிரகாரத்தில் உள்ள ஏழு கிளைகளுடன் காட்சி தருகின்ற புளிய மரத்தடியில்தான் நம்மாழ்வார் சன்னதி உள்ளது. கலி பிறந்த 46ஆம் நாளில் நம்மாழ்வார் அவதரித்தார். அவர் அவதாரத்திற்கு முன்னரே உள்ள இம்மரம் மிகப் பழமையானது என அத்திருக்கோவில் அத்யாபக் திரு. ஆழ்வார் ஐயங்கார் குறிப்பிடுகின்றார்.

தலமரங்களின் காலம் குறித்துக் கூறப்படும் கருத்துக்கள் எவ்வளவு உண்மையானவை என்பதனைத் தாவரவியலார் அறிவியல் சோதனை மூலம் தெளிவுபடுத்த இயலும். காஞ்சிபுரம் ஏகாம்பர நாதர் கோவிலின் மாமரம் அவ்வாறு மதிப்பிடப்பட்டுள்ளதாகத் தலவரலாற்றுக் குறிப்பு கூறுகிறது. ஆனால் சோதனை செய்ததற்கான சான்றிதழ் எதுவும் கிடைக்கவில்லை. தலமரங்களின் பழமை குறித்து இங்கே குறிப்பிடப்பட்ட செய்திகள் அனைத்தும் சோதித்து அறியவேண்டிய, மரபுவழி வழங்கப்பட்ட நம்பிக்கைகளேயாகும். சில தலங்களில் காணப்படும் முதிர்ந்த தலமரங்கள் மிகப் பழமையானவையாகவே தோன்றுகின்றன. ஆனால் இன்று காணப்படும் பல தலவிருட்சங்களும் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக அந்தத் தலத்தில் காணப்படுவனவா என்பதை விஞ்ஞான ஆய்வுவழி மட்டுமே நிரூபிக்க முடியும். முன்பு வளர்ந்த தலமரங்கள் பட்டுப்போன பின்பு புதுப்பிக்கப்பட்ட பல மரங்கள் தலங்களில் இன்றும் உள்ளன. தலமர மரபு ஆயிரக்கணக்கான ஆண்டு பழமையுடையதாக இருக்கலாம்; ஆனால் மரம் மரபுகூறும் வயது உடையதுதானா என்பது கேள்வி. பழமையான தலமரங்கள் என்று குறிப்பிடப்படுவன செவிவழிச் செய்திகளின் அடிப்படையிலும் தோற்ற அடிப்படையிலும் கூறப்படுவனவேயாகும். நூறாண்டுக்கு மேல் பழமையானது எனத் தோன்றும் மரங்களெல்லாம் பழமையான தலமரங்கள் எனப் பாகுபாடு செய்யப்படுகின்றன.

---

* இதன் உயரம் சுமார் 60 அடி என்றும், வயது சுமார் 3500 ஆண்டுகள் என்றும், சுற்றளவு சுமார் 300 அங்குலம் என்றும் நிபுணர்களால் மதிப்பிடப்பட்டுள்ளது (ஜெயசெந்தில் நாதன், 1975:13).

அட்டவணை 5

# தலமரங்களின் இன்றைய நிலை

| தலமரம் | பழமையான மரம் | பழைய மரம் அழிய, புதிய கிளை தளிர்த்தது | பழைய மரம் அழிய புதிய மரம் நடப்பட்டது | மரம் தற்போது இல்லை |
|---|---|---|---|---|
| அசோகம் | | | | திருமாலிருஞ்சோலை* |
| அத்தி | | | | திருஒற்றியூர்<br>திருக்கானாட்டு முள்ளூர் |
| அரசு | திருஆவடுதுறை<br>திருநல்லம்<br>திருஅரசிலி<br>திருச்சேறை*<br>திருக்கச்சி*<br>திருப்புட்குழி*<br>திருப்புல்லாணி* | திருஇரும்பை மாகாளம் | | திருப்பரிதிநியமம்<br>திருச்செங்குன்றூர்* |
| அரளி | | திருக்கரவீரம்<br>திருநெடுங்களம் | | |
| ஆல் | திருவெண்காடு<br>திருநெல்வாயில் அரத்துறை<br>திருமெய்யம்* | | திருஅன்பிலாலந்துறை<br>திருஆலம்பொழில்<br>திருஆலங்காடு | திருத்தண்கால்*<br>திருவில்லிப்புத்தூர் |
| இலந்தை | திருஓமாம்புலியூர்<br>திருஉத்தரகோசமங்கை† | திருக்கீழ்வேளூர் | | திருக்குரங்கணின்முட்டம் |
| இலுப்பை | திருமண்ணிப்படிக்கரை<br>திருஇரும்பைமாகாளம் | | | திருஅனந்தபுரம்* |
| உக்காலம் | திருத்துருத்தி | | | |
| ஊமத்தை | | | | திருமணஞ்சேரி |
| எருக்கு | திருஎருக்கத்தம்புலியூர் | திருக்கானாட்டுமுள்ளூர் | | |
| எலுமிச்சை | | திருஅன்னியூர் | திருமாகறல் | |
| கடம்பு | | | திருக்கடம்பந்துறை | திருக்கடம்பூர் |
| கடுக்காய் | | | திருக்குறுக்கை | |
| கண்டல் | | | | திருமயேந்திரப்பள்ளி |
| கப்பல் அலரி | | | | திருக்கள்ளில் |

| | | | | |
|---|---|---|---|---|
| கருங்காலி | | | | திருஅம்பர்மாகாளம் |
| கல்அத்தி | | | திருப்பரங்குன்றம் | |
| காட்டாத்தி | திருஆப்பாடி | | | |
| | திருச்சிற்றேமம் | | | |
| | திருச்செங்காட்டங்குடி | | | |
| காரை | | | | திருக்கச்சிநெறிக்காரைக்காடு |
| கிளுவை | திருக்கடைமுடி | | | |
| குருந்து | திருப்புனவாசல் | | | |
| | திருப்பெருந்துறை† | | | திருத்தண்டலைநீணெறி |
| கொன்றை | திருஆக்கூர் | திருஆப்பனூர் | திருஅச்சிறுபாக்கம் | திருக்கோலக்கா |
| | திருச்சாத்தமங்கை | | திருவலிதாயம் | |
| | திருப்பந்தணைநல்லூர் | | திருக்கோவலூர் | |
| | திருமணஞ்சேரி | | திருக்கண்ணார்கோவில் | |
| | திருவெண்காடு | | | |
| | திருஅதிகை | | | |
| | திருச்சோபுரம் | | | |
| | திருத்தினைநகர் | | | |
| | திருத்துறையூர் | | | |
| | திருமாணிகுழி | | | |
| | திருப்புத்தூர் | | | |
| | திருஅஞ்சைக்களம் | | | |
| கோங்கு | | | | திருக்கைச்சினம் |
| | | | | திருநன்னிலத்துப்பெருங்கோவில் |
| கோரை | | | | திருமங்கலக்குடி |
| சண்பகம் | திருச்சேறை* | | | திருச்சாய்க்காடு |
| | | | திருஇன்னம்பர் | திருச்சிவபுரம் |
| | | | திருப்பெண்ணாவுகடம் | திருத்தென்குடித்திட்டை |
| | | | திருநந்திபுரவிண்ணகரம் | திருநனிபள்ளி |
| | | | | திருநாகேச்சரம் |
| | | | | திருவைகன்மாடக்கோவில் |
| சந்தனம் | திருவீழிமிழலை | | | திருவீழிமிழலை |
| | | | | திருஅழுந்தூர் |

| | | | | |
|---|---|---|---|---|
| | | | | திருவாஞ்சியம் |
| செருந்தி | திருப்பயற்றூர் | | | |
| தர்ப்பை | | திருநள்ளாறு | | |
| தாழை | திருஅன்பில்* | | | |
| தில்லை | | | | கோயில் |
| தென்னை | | | திருவடகுரங்காடுதுறை | திருத்தெங்கூர் |
| தேற்றா | | | திருக்கோளிலி | |
| நந்தியாவர்த்தம் | | | திருவெண்ணியூர் | |
| நாகலிங்கம் | | | திருவேள்விக்குடி | |
| நார்த்தை | திருப்பேரெயில் | | | |
| நாவல் | திருஆனைக்கா | | | |
| | திருநாவலூர் | | | |
| நெல்லி | திருப்பழையாறை (வடதளி) | திருநெல்லிக்கா | திருநெல்வாயில் | |
| நொச்சி | | | | திருநறையூர்சித்தீச்சரம்* |
| பராய் | திருப்பராய்த்துறை | | | |
| பலா | திருக்கருவீலி | | திருஆரூர்பரவையுண் மண்டளி | திருக்குரக்குக்கா |
| | திருப்பூவனூர் | | | திருவிற்கோலம் |
| | திருவீழிமிழலை | | திருக்காறாயில் | திருப்பறியலூர் |
| | திருச்சீகாழிச் சீராமவிண்ணகரம்* | திருவாய்மூர் | | |
| | | | திருக்குற்றாலம் | |
| | திருக்கோட்டியூர்* | | திருப்பூவணம் | |
| | திருக்கடித்தானம்* | | திருநாலூர் (மயானம்) | |
| பன்னீர் | | | கீழைத்திருக்காட்டுப் பள்ளி | திருச்சோற்றுத்துறை |
| | | | திருஇந்தளூர்* | |
| பனை | திருப்பனந்தாள் | | திருமழபாடி | திருக்கன்றாப்பூர் |
| | திருப்பனையூர் | | திருப்புறவார்பனங் காட்டூர் | |
| | திருப்பனங்காடு | | | |
| | திருஓத்தூர் | | திருவலம்புரம் | |
| | திருக்குறுங்குடி* | | | |
| பாதிரி | திருநாகை* | திருஅவளிவணநல்லூர் | திருவலிதாயம் | |

| | | | | |
|---|---|---|---|---|
| பாரிஜாதகம் | திருத்தென் குரங்காடுதுறை<br>திருநறையூர்ச் சித்தீச்சரம்* | திருஆரூர்<br>திருப்பாதிரிப்புலியூர்<br>திருஆதனூர்*<br>திருவைகுந்தம்* | திருக்களர்<br>திருக்காழி | திருக்கோட்டாறு<br>திருக்கடிகை* |
| பாலை<br>பிரம்பு<br>புரசு | திருக்கோடிகா<br>திருத்தலைச்சங்காடு*<br>திருப்பேர்நகர்* | திருவண் புருடோத்தமம்* | திருக்கஞ்சனூர் | திருப்பாலைத்துறை<br>திருவிசயமங்கை<br>திருத்தலைச்சங்க நாண்மதியம்*<br>திருத்தேவனார்தொகை*<br>திருப்பார்த்தன்பள்ளி*<br>திருவெள்ளக்குளம்<br>திருஈங்கோய்மலை |
| புளி<br>புன்கு<br>புன்னை | திருக்குருகூர்*<br>திருப்புன்கூர்<br>திருஅம்பர் பெருந்திருக் கோவில் | திருக்கோவலூர்* | திருவலிவலம்<br>திருச்சுழியல்<br>திருவேட்டக்குடி<br>திருப்பாடகம்* | திருநனிபள்ளி<br>திருநெல்வெண்ணெய்<br>திருப்புலியூர்* |
| மகிழம் | திருநாரையூர்<br>திருப்புகலூர்<br>திருப்புறம்பியம்<br>திருமறைக்காடு<br>திருமயிலை<br>திருப்புனவாசல்<br>திருஅரங்கம்*<br>திருப்புள்ளம்பூதங்குடி*<br>திருஇடவெந்தை*<br>திருஇராமனதீச்சரம்<br>திருஅண்ணாமலை<br>திருப்புனவாசல்<br>திருக்கண்ணங்குடி*<br>திருக்கண்ணமங்கை* | | திருநீடூர்<br>திருநறையூர்<br>திருஒற்றியூர்<br>திருவெஃகா* | |

| | | | | |
|---|---|---|---|---|
| மந்தாரை | திருக்கானப்பேர் | திருத்திலதைப்பதி | | |
| மருதம் | திருஇடைமருதூர் | | திருஇடையாறு | |
| மல்லிகை | | | திருச்சிக்கல் | திருஇலம்பையங்கோட்டூர் |
| மா | திருமாந்துறை<br>திருநாகைக்காரோணம்<br>திருக்கச்சி ஏகம்பம்<br>திருச்சிரீவரமங்கை* | | திருமயிலாடுதுறை | திருக்குருகாவூர்<br>திருநல்லூர்ப்பெருமணம்<br>திருப்பாதாளீச்சரம்<br>திருஊரகம், திருக்கார்வனம்<br>திருக்காரகம், திருநீரகம்* |
| மாவிலிங்கை | திருச்சேறை | திருநாட்டியத்தான்குடி | | |
| முல்லை | திருக்கருகாவூர்<br>திருக்கருப்பறியலூர் | தென் திருமுல்லைவாயில் | வட திருமுல்லைவாயில் | திருக்காவிரிப்பூம் பட்டினத்துப் பல்லவனீச்சரம் |
| மூங்கில் | | திருநெல்வேலி | திருவேட்களம் | திருப்பழனம்<br>திருப்பாசூர்<br>திருவெண்ணெய்நல்லூர் |
| வன்னி | திருஅரதைப்பெரும்பாழி<br>திருச்செம்பொன்பள்ளி<br>திருப்பட்டீச்சரம்<br>திருப்பாச்சிலாச்சிரமம்<br>திருப்பாம்புரம்<br>திருப்பெருவேளூர்<br>திருப்பேணுபெருந்துறை<br>திருமணஞ்சேரி<br>திருமறைக்காடு<br>திருவன்னியூர்<br>திருவான்மியூர்<br>திரு ஆமாத்தூர்<br>திருமுதுகுன்றம் | திருமருகல் | திருஅகத்தியான்பள்ளி<br>மேலைத்திருக்காட்டுப் பள்ளி<br>திருக்கோட்டூர்<br>திருத்தெளிச்சேரி | திருக்கொள்ளிக்காடு<br>திருப்பூந்துருத்தி<br>திருமுண்டீச்சரம்<br>திருக்கடுவாய்க்கரைப் புத்தூர் |
| வாகை | | | திருவாழ்கொளிபுத்தூர் | |
| வால்மிளகு | | | | திருஊறல் |

| | | | | |
|---|---|---|---|---|
| வாழை | | திருத்தேவூர்<br>திருப்பைஞ்ஞீலி<br>திருமருகல்<br>திருக்கழுங்குன்றம்<br>திருக்கரம்பனூர்* | திருத்தருமபுரம் | திருக்குடவாயில்<br>திருப்பழனம்<br>திருவெள்ளியங்குடி*<br>திருக்கூடல்* |
| வில்வம் | திருக்கடவூர்<br>திருக்கண்டியூர்<br><br>திருக்கானூர்<br>திருக்குடந்தைக்கீழ்க் கோட்டம்<br><br>திருச்சத்திமுற்றம்<br>திருவெண்காடு<br>திருவேதிகுடி<br>திருவைகாவூர்<br>திருஓணகாந்தன்றளி<br>திருஅயீந்திரபுரம்* | திருக்கடிக்குளம்<br>திருப்பள்ளியின் முக்கூடல்<br><br>திருமீயச்சூர்<br>(திருஆலி) திருநகரி* | திருஐயாறு<br>திருக்கலயநல்லூர்<br><br>திருச்சிறுகுடி<br>திருச்செம்பொன்பள்ளி<br><br>திருமாற்பேறு<br><br>திருவக்கரை<br>திருஏடகம்<br>திருநீலக்குடி<br>திருப்பாற்றுறை | திருக்குடமூக்கு<br>திருக்கொண்டீஸ்வரம்<br><br>திருக்கொள்ளம்புதூர்<br>திருநல்லூர்<br><br>திரு (ப்பழையாறை) வடதளி<br>திருப்பெரும்புலியூர்<br>திருமுக்கீச்சரம்<br>திருவலஞ்சுழி<br>திருவியலூர்<br>திருவெண்டுறை<br>திருவல்லம்<br>திருஅறையணிநல்லூர்<br>திருஇராமேஸ்வரம்<br>திருஇடும்பாவனம்<br>திருஇடைச்சுரம்<br>திருஆடானை<br>திருச்சிறுபுலியூர்* |
| விழல் | | திருவிளநகர் | | |
| விழுதி | திருவீழிமிழலை | | | |
| வெள்வேலம் | | | திருவேற்காடு | |
| வேம்பு | திருக்குடந்தைக் காரோணம்<br>திருப்புள்ளிருக்குவேளூர் | | திருவாட்போக்கி | |
| பெயரில்லா விருட்சம் | திருக்கொடுங்குன்றம் | | | |

* இக்குறியிட்டவை திருமால் கோவில்கள்

† இக்குறியிட்டவை திருவாசகக் கோவில்கள்

அழியாது நிற்கும் பழைய மரங்கள் தவிர்ந்த சில மரங்களின் கிளைகள் புயலாலோ பிற காரணங்களாலோ அழிந்துபோக, அவற்றின் அடிமரம் அழியாது இருப்பதால், புதிய கிளைகள் தளிர்த்து வளர்வதைக் காணலாம். திருத்தேவூர், திருப்பைஞ்ஞீலி, திருமருகல், திருக்கழுங்குன்றம், திருக்கரம்பனூர், திருக்குடவாயில் போன்ற தலங்களின் தலமரம் வாழை யாகும். வாழைமரம் வாழ்நாளில் ஒரு முறை வளர்ந்து, பலன் தந்து, பின் அழிந்துபோகும் இயல்புடையது. இத் தலமரங்களின் கனி தந்த பழைய மரம் அழிய, அதன் கிழங்கிலிருந்து புதிய மரம் தோன்றுகின்றது. திரு நள்ளாற்றின் தர்ப்பை, திருவிழ நகரின் விழல் போன்ற புல்லினத்தாவரங்களும் பழைய செடி மறைய அடித்தண்டிலிருந்து புதிதாகத் தளிர்க்கும் தன்மை உடையன.

சில தலங்களில் மட்டும் இயற்கையின் சீற்றத்தாலோ பிற காரணங்களாலோ பழைய தலமரங்கள் அழிந்துபோக புதிய மரங்களை நடும் முயற்சி அண்மைக் காலத்தில் மேற்கொள்ளப் பட்டதைக் காணமுடிகிறது. பல தலங்களில் தலமரங்கள் அழிந்துபோனபின்னர் புதிய மரங்கள் நடும் முயற்சி மேற்கொள்ளப்படவில்லை.

அட்டவணை 5

## மருந்தாகப் பயன்படும் தலமரங்கள்

கண்ணுசாமிப் பிள்ளையின் பதார்த்த குணவிளக்கம் (மூலவர்க்கம்) எனும் நூலை அடிப் படையாகக்கொண்டு தலமரங்களுள் மருத்துவத் தன்மை கொண்டவை எவை எனப் பாகுபாடு செய்யும் முயற்சி மேற்கொள்ளப்பட்டது. உக்தாலம், கண்டல், கப்பல் அலரி, கிளுவை, செருந்தி, பாரிஜாதம், பிஞ்சிலம், பிரம்பு, மாதவி, முல்லை, மூங்கில், விழுதிச்செடி, பெயரில்லா மரம் ஆகியன தவிர்ந்த பிற மரங்கள் மருந்தாகப் பயன்படுவன என அறிய முடிந்தது.

பாடல் பெற்ற தலங்களுக்குச் சென்று தலமரங்கள் தொடர்பான தகவல்களைச் சேகரித்த போது மருத்துவத் தன்மை குறித்த செய்திகளும் அவ்வத் தலங்களில் தகவலாளிகளால் கூறப் பட்டன. தல வரலாறுகளிலும் இம் மருத்துவத் தன்மை குறித்து செய்திகள் காணப்படுகின்றன.

அட்டவணை 6

## திருப்புல்லாணி—அரசமரம்

திருப்புல்லாணி எனும் திருத்தலத்திலுள்ள அரசமரத்தினைக் கண்ட அளவில் சகல நோய்களும் விலகும் என அம்மரத்தடியில் பொறிக்கப்பட்டுள்ள புல்லை அந்தாதிப் பாடல் குறிக்கிறது.

'பெருவயிறு கண்டமாலை யுதரவலி யண்டவாயு
பிரமிய கிரந்தி சூலைதலை நோவும்
இருமலொடு தந்தவாயு குருடு செவிடுஞ் சொலூமை
யிவைகண் முதறொத்த ரோகவினை யாவும்
ஒருநொடியி லஞ்சியோடும் வறுமையொடு சஞ்சிதாதி
யுபரியி னடைந்த பாவமவை தாமும்
மருமலர் பிறந்த கோதை மருவிமகிழும் புலாணி
வளரரசு கண்டபேரை யணுகாவே.'

## பாரிஜாதம்

பதார்த்த குண விளக்கம் நூலில் மருத்துவ குணமுடையனவாகக் குறிக்கப்படாத பாரி ஜாதம் என்னும் தலமரமும் மருத்துவத்தன்மை உடையது என்பதைச் 'சீகாழித் தல வரலாறு' நூல் சுட்டுகின்றது. 'இப்பாரிஜாதம் கொன்றையைப்போல் பூத்து, மாதுளையைப்போல் காய்த்து, மாவைப்போல் பழுத்து, முறையே மந்திரம், மணி, மருந்தின் தன்மைகளைப்

அட்டவணை 6

# தலமரங்களின் பகுதிகள் மருந்தாகின்றன

| தலமரம் | தலம் | மருந்தாகப் பயன்படும் பாகம் | என்ன நோய்க்கு மருந்து |
|---|---|---|---|
| அரசு | திருப்புல்லாணி* | மேல்பட்டை | சகல நோய்களுக்கும் |
| | திருச்செங்குன்றூர்* | பட்டை | கரப்பான் போன்ற நோய்கள் |
| ஆத்தி | திருஆப்பாடி | தழை | மாடுகளுக்கு மருந்து |
| எருக்கு | திருஎருக்கத்தம்புலியூர் | கழியும் பூக்கள் | — |
| கடுக்காய் | திருக்குறுக்கை | காய் | — |
| குருந்து | திருப்பெருந்துறை† | வேரடிமண், இலை | கர்ப்பாசயன நோய்களுக்கு |
| நாகலிங்கம் | திருவேள்விக்குடி | பட்டை | வாதவீக்கத்திற்கு |
| பராய் | திருப்பராய்த்துறை | இலை | காசம், இருமல் |
| பனை | திருஓத்தூர் | பழம் | குழந்தையில்லாதவர்களுக்கு |
| புளி | திருக்குருகூர்* | பட்டை | சகல நோய்களுக்கும் |
| புன்கு | திருப்புன்கூர் | காய் | கக்குவானுக்கு சிறுவர் இடுப்பில் கட்டுகிறார்கள் |
| பூளை | திருஇரும்பூளை | இலை | பரு |
| மந்தாரை | திருக்கானப்பேர் | இலை | காச நோய்களுக்கு |
| மருது | திருஇடைமருதூர் | இலை, பட்டை | — |
| மா | திருக்கச்சி ஏகம்பம் | பழம், பட்டை | குழந்தையில்லாதவர்களுக்கு |
| வன்னி | திருஆமாத்தூர் | இலை | புண், சிரங்கு |
| | திருவன்னியூர் | | |
| வாழை | திருப்பைஞ்ஞீலி | வாழையின் கிழங்கு | வெண்குஷ்டம் |
| வில்வம் | திருக்கானூர் | | |
| | திருப்பாற்றுறை | இலை, காய், பட்டை | — |
| | திருவைகாவூர் | | |
| விழுதி | திருவீழிமிழலை | செடி | — |
| வேம்பு | திருப்புள்ளிருக்குவேளூர் | இலை | தீராத வயிற்றுவலி |

* இக்குறியிட்டவை திருமால் கோவில்களாகும்   † இக்குறியிட்டது திருவாசகப் பாடல்பெற்ற கோவிலாகும்

பெற்றுள்ளது. தன்னை அடைந்தோர்க்கு மலப்பிணி, உயிர்ப்பிணி, உடற்பிணிகளைப் போக்கும் தன்மையது (சீகாழித் தல வரலாறு, 1976:7).

### வெளியூரார் மருந்தாகப் பயன்படுத்தும் நிலை

திருப்பராய்த்துறையின் பராய்மரம், திருவைகாவூரின் வில்வம் ஆகியவற்றின் இலைகளை உள்ளூரார் மருந்திற்காகப் பயன்படுத்துவதில்லை என்று கூறுகிறார்கள். பலரும் மருந்திற்காகத் தழைகளைக் கிள்ளினால் மரம் அழிந்துபோகும் நிலை ஏற்படும்; மரத்தைப் பாதுகாக்கும் நோக்கத்தோடு தலமரத்தின் இலையைக் கிள்ளினால் பாவம் என்று கூறினர் எனலாம். உயிர் காக்கும் மருந்தாக அதைப் பயன்படுத்துவதில் தவறில்லை என்று கருதினர். உள்ளூரார் புனித மாகத் தலமரத்தைக் கருதும் அளவில் வெளியூரார் கருதாத காரணத்தால் அவர்கள் மருந்திற் காகப் பயன்படுத்தினர் என்று கொள்ளலாம்.

### மரங்களின் தெய்வத்தன்மைக்கு மருத்துவக் குணங்களும் காரணமாகலாம்

தலமரங்களின் மருத்துவத் தன்மையும் அவற்றை தெய்வ வடிவினதாகக் கொள்ளக் காரணமாக வாய்ப்பு ஏற்படுத்துவதாகும். தலமரங்களான மருத்துவத் தன்மைகொண்ட தாவரங்களெல்லாம் ஊரின் நடுவே அமைந்துள்ள கோவிலில்—மக்கள் தேடி அலைந்து கொள்ள வேண்டிய தேவையின்றி அனைவருக்கும் எளிதாகக் கிடைக்குமிடத்தில் காணப்பட்டதும்—வழி பாட்டிற்குரிய சிறப்புப்பெறக் காரணம் எனலாம்.

### சிற்பங்களிலும் சிலைகளிலும் மரவடிவங்கள்

பாடல் பெற்ற தலங்களில் தூண்களிலும், சுவர்களிலும் மரத்தின்கீழ் லிங்கம், மரத்தின் கீழுள்ள லிங்கத்திற்குப் பூசை செய்வது போன்ற சிற்பங்கள் உள்ளன இவைதவிர தலமரங்களின் வடிவில் கற்சிலைகள் வடிக்கப்பட்டு அவற்றிற்கும் அன்றாடகப் பூசைகள் செய்யப்படுகின்றன. தொண்டை நாட்டின் திருஒத்தூர், திருப்பனங்காடு எனும் இரு தலங்களிலும் கல்லில் வடிக்கப் பட்ட பனைமரங்கள் உள்ளன மாணிக்கவாசகருக்கு இறைவன் ஞானோபதேசம் செய்த திருப்பெருந்துறையில் குருந்தமரமும் அம்மரத்திலிருந்து இறைவன் மாணிக்கவாசகருக்கு வேத உபதேசம் செய்யும் காட்சியும் கல்லில் வடிக்கப்பெற்றுள்ளது. பாண்டி நாட்டின் திருமால் கோவில்களுள் ஒன்றான திருவில்லிபுத்தூரில் திருமால் வடிவத்திற்கு அருகே கல்லால் செய்யப் பட்ட மர வடிவம் ஒன்று உள்ளது. அதனை 'வட ஆலமரம்'* என்று கூறுகிறார்கள். கற்சிலை களாக அமைந்துள்ள இம்மரவடிவங்களும் தெய்வத்தன்மை உடையனவாகக் கொள்ளப்படுவ தால் அடியவர்கள் வலம்வந்து வழிபாடு செய்வதைக் காணமுடிகிறது (பார்க்க: அட்டவணை 7).

### தலப்பெயர்கள் தலமரத்தின் பெயராகவே உள்ளன

பாடல்களில் குறிப்பிடப்பட்டுள்ள தலப்பெயர்கள், இன்று வழக்கில் கூறப்படும் தலப் பெயர்கள், இறைவனது பெயர்கள் ஆகியனவும் தலமரங்களின் பெயர்களோடு இணைத்துக் கூறப்படுவதைக் காண்கிறோம் (பார்க்க: அட்டவணை 1).

**தலமர அடிப்படையில் அமைந்த தலப்பெயர்கள்**

| | |
|---|---|
| அரசு | திருஅரசிலி |
| ஆல் | திருஅன்பிலாலந்துறை |
| | திருஆலங்காடு |
| | திருஆலம்பொழில் |
| | திருப்பழுவூர் (பழுமரம்—ஆலமரம்) |
| கடம்பு | திருக்கடம்பூர் |
| | திருக்கடம்பந்துறை |

---

* கோவிலின் முதிய அர்ச்சகரான அலங்காரபட்டர் ஆய்வாளரிடம் நேர்காணலின்போது கூறிய தகவல் இது.

அட்டவணை 7

# சிற்பங்களில் மர வடிவங்கள்

| தலம் | சிற்பம் | அமைந்துள்ள இடம் |
|---|---|---|
| திருஅன்பிலாலந்துறை | மரத்தடிலிங்கம், முனிவர் தலையில் மரம் | கல்தூண்களில் |
| திருஆனைக்கா | முனிவர் தலையில் மரம், அதனடியில் லிங்கம், அம்மன், சிலந்தி, யானை | கல்தூண்கள், நவ துவாரத்துக்குமேல் |
| திருக்கோளிலி | மரத்தின்கீழ் லிங்கம் | கோவில் நுழைவாயில் இடதுபுறச்சுவர் |
| திருத்தேவூர் | குலைவாழையின் அடியில் லிங்கம் (சுதைச் சிற்பம்) | நுழைவாயிலில் |
| திருப்புறம்பயம் | மரத்தடியில் லிங்கம் | கல்தூணில் |
| திருப்பைஞ்ஞீலி | மரத்தடி லிங்கத்திற்குப் பூஜைசெய்யும் காட்சி | கல்தூண்களில் |
| திருமாந்துறை | மரத்தடி லிங்கத்தை மானும் முனிவரும் பூஜிப்பது (சுதைச் சிற்பம்) | இரண்டாவது நுழைவாயிலில் |
| திருவெண்காடு | மரத்தடி லிங்கம் | அம்மன் கோவில் பிரகாரத்தூண் |
| திருவேள்விக்குடி | மரத்தடி லிங்கத்தை மன்னர் பூஜிப்பது | கருவறைச்சுவரில் |
| திருஒற்றியூர் | மரத்தின்கீழ் லிங்கம் | கல்தூணில் |
| திருக்கச்சி ஏகம்பம் | மரத்தடியில் அம்மன் லிங்கபூஜை | கல்தூண்களில் |
| திருப்பனங்காடு | மரத்தின்கீழ் லிங்கம், அம்மன் | கல்தூணில் |
| திருவான்மியூர் | மரத்தடியில் லிங்கம் | தூண்களில் |
| திருத்தினைநகர் | மரத்தடியில் லிங்கம் | கீழ்ப்புறச்சுவரில் |
| திருப்பாதிரிப்புலியூர் | மரத்தடியில் அம்மன் தவம் | அம்மன் சந்நதி மேற்புறவாயில் |
| திருஆடானை | மரத்தடியில் லிங்கம் | தூண்களில் |
| திருஆப்பனூர் | மரத்தடியில் லிங்கம், மரத்தின்கீழ் மன்னன் குதிரையில் வருவது. மரத்தடி லிங்கத்தை யானை பூஜிப்பது | தூண்களில் |
| திருஆலவாய் | மரத்தின்கீழ் லிங்கம் | தூண்களில் |
| திருக்குற்றாலம் | மரத்தின்கீழ் லிங்கம், சிவன் | தூண்களில் |
| திருக்கொடுங்குன்றம் | மரத்தடியில் லிங்கம் | 108 படியில் |
| திருப்பரங்குன்றம் | மரத்தடியில் லிங்கம் | தூண்களில் |
| திருப்பூவணம் | மரத்தடியில் லிங்கம் | தூண்களில் |
| திருக்குருகூர்* | மரத்தடியில் ஆழ்வார் இருப்பது போன்ற வடிவங்கள் | சுவர்களில், தூண்களில் |

* இக்குறியிட்டது திருமால் கோவில்

| | |
|---|---|
| கொட்டைச்செடி | திருக்கொட்டையூர் |
| கோரை (பஞ்சாய்க் கோரை) | திருச்சாய்க்காடு |
| ஞீலி வாழை | திருப்பைஞ்ஞீலி |
| நாவல் | திருநாவலூர் |
| நெல்லி | திருநெல்லிக்கா |
| பராய் | திருப்பராய்த்துறை |
| பனை | திருப்பனங்காட்டூர் |
| | திருப்பனந்தாள் |
| | திருப்பனையூர் |
| | திருப்புறவார் பனங்காட்டூர் |
| பாதிரி | திருப்பாதிரிப்புலியூர் |
| பாலை | திருப்பாலைத்துறை |
| புன்கு | திருப்புன்கூர் |
| பூளை | திருஇரும்பூளை |
| மருகல் (வாழை) | திருமருகல் |
| மருதம் | திருஇடைமருதூர் |
| மா | திருமாந்துறை |
| | திருக்கச்சி ஏகம்பம் |
| முல்லை | தென்திருமுல்லைவாயில் |
| | வடதிருமுல்லைவாயில் |
| மூங்கில் | திருப்பாசூர் |
| வன்னி | திருவன்னியூர் |
| விழல் (புல்) | திருவிளநகர் |
| விழுதி | திருவீழிமிழலை |
| வெள்வேல் | திருவேற்காடு |

தலமரங்கள் அடிப்படையில் வழக்கில் மாறுபட்டு வழங்கும் பெயர்கள்

| | |
|---|---|
| ஆல் | கீழப்பழுவூர் |
| இலுப்பை | இலுப்பைப்பட்டு |
| கடம்பு | மேலக்கடம்பூர் |
| | கடம்பந்துறை |
| கொட்டைச்செடி | கீழக்கொட்டையூர் |
| கோரை (பஞ்சாய்) | சாயாவனம் |
| தென்னை | திருத்தெங்கூர் |
| நெல்லி | திருநெல்லிக்காவல் |
| பனை | திருப்பனங்காடு |
| | பனையபுரம் |
| பாதிரி (பாடலம்) | பாடி |
| முல்லை | திருமுல்லைவாசல் |
| | முல்லைவாயில் |
| மூங்கில் (பாசு) | திருப்பாசூர் |
| விழல்புல் | விளநகர் |

இறைவன் பெயர்களும் தலமரங்களின் பெயரோடு இணைத்துக் கூறப்படுகின்றன

| | |
|---|---|
| அரசு | அரசிலிநாதர் |
| ஆல் | ஆலந்துறையார் |
| | ஆலமுடையார் |
| | வடமூலேசுரர் |

| | |
|---|---|
| | வடாரண்யேஸ்வர் |
| | வடபத்ரசயனர் (திருமால்) |
| உத்தாலம் | உத்தவதேஸ்வரர் |
| கடம்பு | ஸ்ரீகடம்பவனேஸ்வரர் |
| கொன்றை | கொன்றைவனநாதர் |
| கோரை | இரத்தின சாயா வனேஸ்வரர் |
| ஞீலி | ஸ்ரீஞீலிவனேஸ்வரர் |
| தர்ப்பை | தர்ப்பாரண்யேஸ்வரர் |
| நாவல் | நாவலேஸ்வரர் |
| நெல்லி | நெல்லிவனநாதர் |
| பராய் | பராய்த்துறைநாதர் |
| பன்னீர் | ஓதனவனேஸ்வரர் |
| பனை | தாலபுரீஸ்வரர் |
| | திருப்பனங்காட்டீஸ்வரர் |
| பாதிரி | பாடலீசுரர் |
| பாலை | பாலைவனநாதர் |
| மருது | மருதவாணர் |
| | மருதீஸ்வரர் |
| மா | ஆம்ரவனேஸ்வரர் |
| | ஏகாம்பரநாதர் |
| முல்லை | மாதவிவனேஸ்வரர் |
| | முல்லைவனநாதர் |
| மூங்கில் | பாசுபதீஸ்வரர் |
| வன்னி | சமீவனேஸ்வரர் |
| வில்வம் | வில்வவனேஸ்வரர் |
| | வில்வநாதசுவாமி |
| | வில்வநாதேஸ்வரர் |
| | வில்வாரண்யேஸ்வரர் |
| விழுதிச்செடி | விழிநாதசுவாமி |

மேலே காட்டிய பெயர்களைப் பார்த்த அளவிலேயே இவை தலமரங்களின் அடிப்படையில் அமைந்துள்ளமையைக் காண்கிறோம். துறை, காடு, பொழில், வனம், ஆரண்யம் ஆகிய சொற்களும் இம்மரப் பெயர்களோடும் இறைப் பெயர்களோடும் இணைத்துக் கூறப்பட்டுள்ளமையை அறிகிறோம். எனவே இறைவன் வந்தமரும் இடம் வனத்திடையே அமைந்த மரத்தடி என்பது தெளிவாகிறது.

## தலமரங்கள் தொடர்பான கதைகள்

தமிழ் நாட்டின் திருக்கோவில்களின் பின்னணியில் கூறப்படும் புராணக் கதைகளும் மரபு வழி வரும் கூற்றுக்களும் ஆதியில் மரத்தடியில் லிங்கம் அமைந்து பின் கோவிலாயின என்பதை விளக்குவனவாகவே உள்ளன. சான்றாகச் சில கதைகள் இங்கே சுட்டப்படுகின்றன.

## திருஆப்பாடி

திருக்குறுக்கை வீரட்டத்திருப்பதிகத்தில்,

'தழைத்ததோ ராத்தியின் கீழ்த்தாபர மணலால் கூப்பி
அழைத்தங்கே யாவின் பாலைக்கறந்து கொண்டாட்டக்கண்டு
பிழைத்ததன் றாதைதாளைப் பெருங்கொடு மழுவால்வீசக்
குழைத்ததோர் அமுதம் ஈந்திட்டார் குறுக்கை வீரட்டனாரே' (தேவா. 2534)

என நாவுக்கரசர் குறிப்பிடுவது திருஆப்பாடியின் ஆத்திமர நிழலில் இறைவன் லிங்கமாக அமைந்த செய்தியை உறுதி செய்கிறது.

## வட திருமுல்லைவாயில்

சுந்தரர் வட திருமுல்லைவாயில் திருப்பதிகத்தில்,

'சொல்வரும் புகழான் றொண்டை மான் களிற்றைச்
சூழ்கொடி முல்லையாற் கட்டிட்
டெல்லையிலின் பமவன் பெற வெளிப்பட்
டருளிய விறைவனே...' (தேவா. 1381–1382,10:1–2)

என்று தொண்டைமான் தன் களிற்றின் காலைச் சுற்றிய முல்லைக் கொடியை அகற்ற அங்கே இறைவன் வெளிப்பட்டருளிய காட்சியைக் காட்டுகிறார். இந்நிகழ்ச்சி திருமுல்லைவாயில் புராணப் பாடலிலும் திரு அம்பர் புராணத்திலும் குறிப்பிடப்படுகிறது.*

தலமரங்கள் தொடர்பான கதைகள் பல கூறப்படுகின்றன. எனினும் விரிவஞ்சி செய்திகள் அட்டவணைப் படுத்தப்படுகின்றன (பார்க்க: அட்டவணை 8).

பெருவாரியான கதைகளும் மரங்கள் அடர்ந்த வனத்தினிடையேயும் மரங்களின் அடியிலும் இறைவன் அமர்ந்ததனையே சுட்டுகின்றன. சில கதைகள் இறைவன் மரத்தடியில் காட்சி தந்தது, அறவுரை கூறியது போன்ற நிகழ்வுகளையும், மரத்தடியில் லிங்கம் அமைத்து தவம், பூசை செய்த நிகழ்வுகளையும் தெளிவாக்குகின்றன. இம் மரபுவழிப்பட்ட கதைகளைப் பார்க்கும்போது ஆதியில் இறைவடிவம் அமைக்கப்பட்டு வழிபாடுகள் நிகழ்ந்த இடம்—ஆதி கோவில்—மரத்தடி நிழலே என்று எண்ணத் தோன்றுகிறது.

சில கதைகள் தேவர்கள், அரம்பையர், முனிவர் முதலானோரும் வேதமும் மரமாக உரு மாறி நின்ற நிலையை விளக்குகின்றன. மரத்தடியில் இறைவன் திருமணம், பரதேசிக் கோலத்திற்கு மரமே குடையானது, சாட்சியாக அமைந்தது, சாட்சிக்காக இடம் பெயர்ந்தது, கங்கை நீரை உறுதி செய்யத் தோன்றியது, தேவலோக மரங்கள் சாபத்தால் பூமிக்கு வந்தது, துறைகாட்ட உதவியது, நிழல் தந்தது, மரத்தடியில் ஆயுதம் ஒளிந்தது, சம்பந்தர் பாடலால் ஆண் பனை பெண் பனையானது, மரஅடி சமாதியாக அமைந்தது, மரஇலை உழைப்புக்குத் தகுந்த ஊதியமாக மாறியது, இறைவன் மரமேறியாக வந்து, செட்டிப் பெண்ணின் தாகந் தீர்த்தது, சுந்தரர் மகிழ மரத்தடியில் சங்கிலி நாச்சியாருக்கு வாக்களித்தது என்பன போன்ற கதைகளெல்லாம் தலமரங்களைச் சிறப்பித்துக் கூறுவனவாகவும், எதிர்காலத் தலைமுறை அதனைப் போற்றிப் பாதுகாக்க வேண்டும் எனும் கருத்தை வலியுறுத்துவனவாகவும் அமைந்தன என்றே தோன்றுகிறது.

## திருக்கண்டியூரின் தலமரம்

திருக்கண்டியூரின் வில்வ மரம் பற்றிய மரபுவழிச் செய்தி கோவிலுக்குப் பின்னரே மரம் தோன்றியது என்பதையே காட்டுவதாகும்; எனவே ஆதியில் தலமரமே கோவில் என்ற கருத்தை ஏற்றுக்கொள்வதற்கில்லை என அக்கோவில் அர்ச்சகர் திரு. புஷ்பவனேஸ்வர குருக்கள் கூறுகிறார்.

---

* 'மற்றொரு காலத்தில் வாழ்தொண்டை மானும்
சத்துரு வுடனே சகிக்க மாட்டாமல்
அத்தியில் ஏறி அலறி ஓடிடச்
சுற்றிட முல்லைக் கொடியது சூழச்
சந்திர வாளால் தறித்திடும் போது
சுந்தர லிங்கத் துச்சியில் சூழ
மத்தகந் தனிலே ரத்தமாய்ப் பெருக
பயந்தனன் தொண்டைமான் பயந்தெழுவதனால்...' (பரசுராம்: 85)

'ஒருகரி முன்னமுல்லை யொருகொடி தகைக்கப்பட்ட
தொருபிடி யிந்நாள் வள்ளைக்கொடி பலவொழித்துச்செல்லும்
பெருகவும் வியப்பே யென்னிற் குவலயம் பெயர்ப்ப தோரில்
பெருமித மாதோ பற்பல கொடிகளைப் பேதித்தேகல்.' (மீனாட்சிசுந்தரம் பிள்ளை, 1965,81)

# தலமரம் தொடர்பான கதைகள்

| தலமரம் | தலம் | |
|---|---|---|
| | **வனத்திடையே இறைவன்** | |
| ஆல் | திருஆலங்காடு | ஆலங்காடு |
| காரை | திருக்கச்சிநெறிக்காரைக்காடு | காரைக்காடு |
| கொன்றை | திருக்கோலக்கா | கொன்றைவனம் |
| தர்ப்பை | திருநள்ளாறு | தர்ப்பைவனம் |
| நாவல் | திருநாவலூர் | நாவல்காடு |
| புரசு | திருக்கஞ்சனூர் | பலாசவனம் |
| | திருத்தலைச்சங்கநாண்மதியம்* | பலாசவனம் |
| மா | திருமாந்துறை | ஆம்ரவனம் |
| வாழை | திருமருகல் | கதலீவனம் |
| | திருக்கழுங்குன்றம் | கதலீவனம் |
| | திருக்கூடல்* | கதலீவனம் |
| வில்வம் | திருப்பள்ளியின் முக்கூடல் | வில்வாரண்யம் |
| | திருஆடானை | தேவதருவனம் |
| விழல் | திருவிளநகர் | விழல்காடு |
| வேய் | திருவேட்களம் | மூங்கில்வனம் |
| | திருப்பாசூர் | மூங்கில்வனம் |
| | திருநெல்வேலி | வேணுவனம் |
| | **வனத்திடையே இறைவன் (பொது)** | |
| | திருக்கோளிலி | புட்பவனம் |
| | திருவாஞ்சியம் | கந்தாரண்யம் |
| | திருச்செம்பொன்பள்ளி | |
| | திருப்பாற்றுறை | |
| | திருஅரங்கம்* | |

மரத்தடியில் இறைவன்

| | |
|---|---|
| அரசு | திருஅரசிலி |
| ஆல் | திருஆலம்பொழில் |
| | திருவில்லிப்புத்தூர்* |
| இலந்தை | திருநணா |
| இலுப்பை | திருமண்ணிப்படிக்கரை |
| கொன்றை | திருப்பந்தணைநல்லூர் |
| | திருவலிதாயம் |
| | திருஆப்பனூர் |
| | திருஅஞ்சைக்களம் |

இறைவன் மரத்தடியில் உபதேசம் செய்தார்

| | | |
|---|---|---|
| ஆல் | திருவெண்காடு | சுவாதகேது ரிஷிக்கு |
| கடுக்காய் | திருக்குறுக்கை | சனகர், சனந்தர், சனாதனர், சனக்குமாரர் என்ற சனகாதியருக்கு |
| குருந்து | திருப்பெருந்துறை† | மாணிக்கவாசகருக்கு |
| சந்தனம் | திருஅழுந்தூர் | இறைவன் வேதம் ஓதினார் |
| புன்கு | திருப்புன்கூர் | அம்பாளுக்கு |
| வில்வம் | திருக்கடவூர் | பிரம்மனுக்கு |

மரத்தடியில் தவம்

| | | |
|---|---|---|
| அரசு | திருஆவடுதுறை | திருமூலர் |
| | திருநல்லம் | கௌதமமுனிவர் |
| | திருஇரும்பை மாகாளம் | கருவிழிச்சித்தர் |
| | திருச்சேறை* | காவேரி |
| இலந்தை | திருஓமாம்புலியூர் | அம்மன் |
| | திருஉத்தரகோசமங்கை† | அம்மன் |
| கொட்டைச்செடி | திருக்கொட்டையூர் | ஏரண்டமுனிவர் |
| கொன்றை | திருஅதிகை | அம்மன் |
| | திருமாணிகுழி | சப்தரிஷிகள் |
| | திருப்புத்தூர் | வால்மிகி |
| கோங்கு | திருக்கைச்சினம் | இந்திரன் |
| சண்பகம் | திருநாகேச்சரம் | அம்மன் |
| | திருநந்திபுர விண்ணகரம்* | திருமகள் |

| | | |
|---|---|---|
| தாழை | திருஅன்பில்* | தாழைதேவி |
| தெங்கு | திருத்தேங்கூர் | மகாலக்ஷ்மி |
| நாவல் | திருஆனைக்கா | ஜம்புமுனிவர் |
| பனை | திருப்பனந்தாள் | அம்மன் |
| | திருமழபாடி | புருஷாமிருகர் |
| பாதிரி | திருப்பாதிரிப்புலியூர் | அம்மன் |
| | திருஅவிநாசி | அம்மன் |
| புரசு | திருவெள்ளக்குளம்* | ஸ்வேதமகாராஜா |
| புன்னை | திருவேட்டக்குடி | அம்மன் |
| | திருநாரையூர் | நவநாராயண முனிவர் |

**மரத்தடியில் இறைவன்**

| | |
|---|---|
| நத்தியாவர்த்தம் | திருவெண்ணியூர் |
| பாதிரி | திருவலிதாயம் |
| | திருஆதனூர்* |
| பாரிஜாதம் | திருக்களர் |
| பாலை | திருப்பாலைத்துறை |
| புளி | திருஈங்கோய்மலை |
| புன்னை | திருச்சுழியல் |
| | திருப்புள்ளம்பூதங்குடி* |
| மருது | திருஅம்பர் மாகாளம் |
| மா | திருமயிலாடுதுறை |
| முல்லை | திருக்கருப்பறியலூர் |
| | திருக்கருகாவூர் |
| | தென் திருமுல்லைவாயில் |
| | வட திருமுல்லைவாயில் |
| வன்னி | திருக்கோட்டூர் |
| வாழை | திருத்தேவூர் |
| வில்வம் | திருஐயாறு |
| | திருமுக்கீச்சரம் |
| | திருவைகாவூர் |

**மரத்தினுள் இறைவன்**

| | |
|---|---|
| ஆல் | திருஅன்பிலாலந்துறை |
| இலுப்பை | திருஅனந்தபுரம் |

| | | |
|---|---|---|
| | **இறைவன் மரத்தடியில் காட்சி கொடுத்தார்** | |
| அசோகம் (ஜோதி) | திருமாலிருஞ்சோலை* | மலையத்துவச பாண்டியனுக்கு |
| கடம்பு | திருக்கடம்பந்துறை | கண்ணுவமுனிவருக்கும் தேவர்களுக்கும் |
| கொன்றை | திருத்தினைநகர் | அடியவருக்கு |
| புன்னை | திருஅம்பர் பெருந்திருக்கோயில் | பிரம்மனுக்கு |
| வன்னி | திருக்கடுவாய்க்கரைப்புத்தூர் | அமைச்சருக்கு |
| | திருவான்மியூர் | அகத்தியருக்கு |
| வாகை | திருவாழ்கொளிபுத்தூர் | அர்ஜுனன் |
| வேம்பு | திருப்புள்ளிருக்குவேளூர் | அங்காரனுக்கு |
| | **மரத்தடியில் இறைவன் திருமணம்** | |
| பனை | திருவலம்புரம் | |
| மகிழம் | திருக்கண்ணங்குடி* | ரிஷிகள் |
| மந்தாரம் | திருத்திலதைப்பதி | அம்மன் |
| மல்லிகை | திருச்சிக்கல் | வசிஷ்டர் |
| மா | திருப்பாதாளீச்சரம் | தனஞ்சயமுனிவர் |
| வன்னி | திருத்தெளிச்சேரி | அம்மன் |
| | திருஅகத்தியான்பள்ளி | அகத்தியர் |
| | திருமறைக்காடு | விசுவாமித்திரர் |
| வில்வம் | திருக்கானூர் | அம்மன் |
| | திருஇடும்பாவனம் | பிரமன் |
| | திருஆலி திருநகரி * | யோகநரசிம்மர் |
| | **மரத்தடியில் பூஜை** | |
| இலந்தை | திருக்கீழ்வேளூர் | முருகன் |
| எலுமிச்சை (குருந்து) | திருஅன்னியூர் | ரதி |
| கல்அத்தி | திருப்பரங்குன்றம் | நக்கீரர் |
| காட்டாத்தி | திருஆப்பாடி | விசாரகுமாரர் |
| கிளுவை | திருக்கடைமுடி | கன்மரிஷி |
| சண்பகம் | திருவைகல் மாடக்கோவில் | திருமகள் |
| தில்லை | கோயில் | வியாக்ரபாதமுனிவர் |
| பனை | திருப்பனங்காடு | அகத்தியர் |
| புன்னை | திருநாகைக்காரோணம் | புஞ்சன் புதல்வர் |

| | | |
|---|---|---|
| மகிழம் | திருநீடூர் | இந்திரன் |
| | திரு அண்ணாமலை | அகத்தியர், வசிஷ்டர் |
| மந்தாரம் | திருகானப்பேர் | மருதுப்பாண்டியன் |
| மல்லிகை | திருஇலம்பையங்கோட்டூர் | அரம்பையர் |
| மாதவி | திருமுருகன்பூண்டி | மாலாதரவேடன் |
| வால்மிளகு | திருஊறல் | உசிதமுனி |
| வில்வம் | திருச்சிறுகுடி | உமை |
| | உருமாறி நிற்றல் | |
| அரசு | திருஆவடுதுறை | முப்பத்து முக்கோடி தேவர்கள் |
| எருக்கு | திருஎருக்கத்தம்புலியூர் | நைமிசாரண்ய முனிவர்கள் |
| கடம்பு | திருஆலவாய் | வேதங்கள் |
| காட்டாத்தி | திருச்செங்காட்டங்குடி | தாழம்பூ |
| துளசி | திருவிற்குடி | அசுரன் மனைவி |
| | திருவிண்ணகர்* | திருத்துழாய்தேவி |
| நாவல் | திருஆனைக்கா | ஜம்புமுனிவர் |
| பலா | திருக்குற்றாலம் | வேதங்கள் |
| பனை | திருக்குறுங்குடி* | பிரம்மராக்ஷசன், பிராமணன் |
| பவளமல்லிகை | திருத்தென்குரங்காடுதுறை | அம்மன் |
| புளி | திருக்குருகூர்* | ஆதிசேஷன் |
| புன்னை | திருப்புகலூர் | திருமால் |
| மருது | திருஇடைமருதூர் | கயிலையங்கிரி |
| மா | திருக்கச்சிஏகம்பம் | வேதங்கள் |
| | திருஉசாத்தானம் | அமுதத்துளி |
| வன்னி | திருப்பாண்டிக்கொடுமுடி | பிரமன் |
| | திருஆமாத்தூர் | பிருங்கி முனிவர் |
| | திருக்கோட்டூர் | அமுதத்துளி |
| வாழை (ஞீலி) | திருப்பைஞ்ஞீலி | அரம்பையர் |
| வில்வம் | திருவைகாவூர் | வேதம் |
| | திருக்கொள்ளம்புதூர் | அமுதத்துளி |
| | திருக்குடந்தைக் கீழ்க்கோட்டம் | அமுதகலசத்தின் வில்வத்தழை |
| | திருக்குடமூக்கு | அமுதகலசத்தின் வில்வத்தழை |
| வெள்வேலம் | திருவேற்காடு | வேதங்கள் |
| வேணு (மூங்கில்) | திருவெண்ணெய்நல்லூர் | வேதங்கள் |
| ஆல் | திருத்தண்கால்* | விருட்சம் தண்காலகிரியாக மாறிற்று |

| | | |
|---|---|---|
| | மரம் பரதேசிக்கோலக் குடையானது | |
| உக்தாலம் | திருத்துருத்தி | |
| | மரம் சாட்சியாக அமைந்தது | |
| வன்னி | திருப்புறம்பயம் | |
| | திருமருகல் | |
| | மரம் சாட்சிக்காக இடம் பெயர்ந்தது | |
| காட்டாத்தி | தருச்சிற்றேமம் | |
| | கங்கைநீரை உறுதிசெய்யத் தோன்றியது | |
| பிஞ்சிலம் | திருக்கடவூர் | |
| | தேவலோக மரங்கள் சாபத்தால் பூமிக்கு வந்தன | |
| நெல்லி | திருநெல்லிக்கா | கற்பகம், சந்தனம், அரிசந்தனம், மந்தாரம், பாரிஜாதம் - ஐந்தும் நெல்லி மரமாயின |
| | துறைகாட்ட உதவியது | |
| விழல் | திருவிளநகர் | |
| | மரம் நிழல் தந்தது | |
| பனை | திருப்பனையூர் | சோழமன்னன் கரிகால் வளவனுக்கு |
| | மரத்தடியில் ஆயுதம் ஒளிந்தது | |
| வன்னி | திருப்பாண்டிக் கொடுமுடி | பஞ்சபாண்டவர் |
| வாகை | திருவாழ்கொளிபுத்தூர் | அர்ஜுனன் வாள் |
| | சம்பந்தர் பாடலால் ஆண் பனை பெண் பனையாயிற்று | |
| பனை | திருஓத்தூர் | |
| | மரத்தடி சமாதி | |
| மகிழம் | திருக்கண்ணமங்கை | திருக்கண்ணமங்கை ஆண்டான்—அடியவர் |
| வில்வம் | திருவெண்காடு | பிரம்மசமாதி |
| | வன்னிப்பத்திரம் உழைப்புக்குத் தகுந்த ஊதியமாக மாறியது | |
| வன்னி | திருமுதுகுன்றம் | |
| | இறைவன் மரமேறியாக வந்து செட்டிப் பெண்ணின் தாகம் தீர்த்தார் | |
| தென்னை | திருவடகுரங்காடுதுறை | |
| | சுந்தரர்-சங்கிலி நாச்சியாருக்கு மரத்தடியில் வாக்களித்தார் | |
| மகிழம் | திருஒற்றியூர் | |

* இக்குறியிட்டவை திருமால் கோவில்களாகும் † இக்குறியிட்டவை திருவாசகக் கோவில்களாகும்

'சதாபத மகரிஷி இத்தலத்தில் சீடர்களுக்குப் பாடம் சொல்லிவந்தார். அவர் பிரதோஷ காலத்தில் ககன மார்க்கமாக (ஆகாய வழியாக) திருக்காளத்தி சென்று திருக்காளத்தி நாதரை வழிபட்டு இரவு கண்டியூர் வந்தடைவது வழக்கம். இப்படிச் செய்துவரும் காலத்தில் சீடர்கள் அவரிடம், 'தினமும் இப்படிச் சென்று வருவது சாத்தியமா?' என்று வினவினார்கள். அப்பொழுது மகரிஷி சீடர்களிடம் தன் பிரதிக்ஞையை வெளியிட்டார்: 'என்று என்னால் இங்கிருந்து திருக்காளத்தி சென்று நாதரைத் தரிசிக்க முடியவில்லையோ அன்றைய தினமே இந்தச் சரீரத்தை அக்கினிப் பிரவேசத்துக்கு உட்படுத்துவதே என் சங்கல்பம்' என்றார். தனது சங்கல்பத்தை வெளியிட்ட மாத்திரத்தில் சோதனை ஏற்பட்டது. திருக்காளத்தி சென்று தரிசிக்க முடியாத அளவில் காற்றும் மழையும் ஏற்பட்டு, பிரதோஷகாலம் தவறிவிட்டது. உடனே சீடர்களிடம் நெருப்பு மூட்டச் சொல்லி அக்கினியை வலம் வந்து அக்கினிப் பிரவேசத்திற்குத் தயாராகும் போது பெரிய சிவாகாரமாக வில்வ மரம் தோன்றியது. வில்வ மரத்தைக் கண்டவுடன் 'ஆஹா! இது கயிலாயத்தில் உள்ளதல்லவா' என நினைத்தார். இறைவன் காட்சி தந்து திருக்காளத்தியும் திருக்கண்டியூரும் வேறல்ல என்பதை உணர்த்தினார்.

இம் மரபுக் கதையைப் படிக்கையில் சதாபத மகரிஷியின் ஆசிரமமாக இருந்த திருக்கண்டியூர், திருக்கயிலாயத்தின் வில்வம் தோன்றி, இறைவன் காட்சி தந்த பின்னரே திருக்கோவில் ஆயிற்று என்ற எண்ணமே எழுகின்றது. ஆக, இங்கும் தலமரம் தோன்றிய பின்னரே கோவில் அமைந்தது என்று கொள்ளலாம். இப்படிப்பட்ட மரபுவழிக் கதைகள் அடிப்படையில் உண்மை முடிவு காண இயலாது.

## திருப்பெருந்துறையின் குருந்தமரம்

மறைமலையடிகளார் 'மாணிக்கவாசகர் வரலாறும் காலமும்' என்ற தமது நூலில் மாணிக்கவாசகருக்குத் திருப்பெருந்துறையில் இறைவன் வேதோபதேசம் செய்தது தலமரமான குருந்தமரத்தினடியிலா அன்றித் திருக்கோவிலினுள்ளா என்று ஆராய்கிறார்: 'அடிகள் தம் பரிவாரங்களையெல்லாம் போக்கியபின் தாம் திருப்பெருந்துறையிலுள்ள திருக்கோயிலுட்புக, அங்கு ஒரு பக்கத்தே அடியார் புடைசூழ மெய்க்குரவன் எழுந்தருளியிருத்தலைக் கண்டார் என நம்பியார் திருவிளையாடல் கூறத் திருவாதவூர்ப் புராணம், அடிகள் திருப்பெருந்துறையில் ஒரு பூஞ்சோலைப் பக்கமாய்ப் போதுகையில் அதனின்றும் அடியார் ஓதும் அறிவுநூல் ஒலிவருதல் கேட்டு, ஒற்றரை விடுத்து, அவர் வந்துரைத்ததன் மேல், அருட்சோலையுட்புக்கு ஆசிரியனையும் அவனைப் புடைசூழ்ந்த அடியார் குழாத்தினையும் கண்டாரெனப் புகலும். இவ்வரலாற்றுப் பகுதியிலும் நம்பியார் திருவிளையாடல் பிழைபடுகின்றது. திருப்பெருந்துறையில் அடிகள் சென்ற காலத்து ஆண்டு சிவபிரான் திருக்கோவில் இருந்ததில்லை என்பதற்கு அதன்கண் இஞ்ஞான்றும் சிவலிங்க வடிவம் இல்லாமையும், ஆண்டுச் செய்யப்படும் நாள் வழிபாடு மாணிக்கவாசகப் பெருமாற்கும், அவரை ஆண்டருளிய ஆசிரியன் வைத்துச் சென்ற திருவடிச் சுவட்டிற்குமே ஆற்றப்படுதலும், திருவிழாவென்னுஞ் சிறப்பு வழிபாடு மாணிக்கவாசகப் பெருமாற்கே செய்யப்படுதலும் சான்றாமென்க' என்று கூறும் அவர்தம் ஆய்விற்குக் கூறும் முடிவு வருமாறு: 'தம்மை திருப்பெருந்துறையில் இறைவன் ஆசிரிய வடிவிற்றோன்றி அடிமை கொண்டருளிய வரலாற்றினையே அடிகள் திருவாசகத்தின்கண் அருளிச் செய்கின்றாரன்றி, ஆண்டு திருக்கோவில் உண்டெனக்கொண்டு அதன்கண் சிவபிரானை வழுத்துந் திருப்பதிகங்கள் அருளிச் செய்யாமையும், ''திருப்பெருந்துறையில் நிறை மலர்க் குருந்த மேவிய சீர் ஆதியே'' என்றருளிச் செய்தாரல்லாது திருக்கோவிலுட் குருந்தம் மேவிய சீர் ஆதியே என்று அருளிச் செய்யாமையும் கருதற்பாலனவாகும். மாணிக்கவாசகப் பெருமாற்கு அருட்பாடு நிகழ்ந்த பல நூற்றாண்டுகட்குப் பின்னரேதான் திருப்பெருந்துறையில் திருக்கோவில் அமைக்கப்பட்டதென்பது தேற்றமாம். அற்றன்று, அடிகட்கு முன்னும் ஆண்டுத் திருக்கோவில் உண்டெனின் அதன்கண் இதுகாறுஞ் சிவலிங்க வடிவம் இல்லாமையும் அடிகட்கு முற்காலத்தாயின் ஆண்டுச் சிவலிங்க வடிவம் இருந்தாதல் வேண்டுமாகலின், அதுபின் இல்லையாதல் இசையாமையும் தேர்ந்துணர வல்லார்க்கு அவ்வாறுரைத்தல் பொருந்தாது என்க. எனவே, அடிகள் திருப்பெருந்துறை சென்ற ஞான்று தம் மெய்க்குரவனைக் கண்டது ஒரு பூங்காவிலேயாமென்னுந் திருவாத

ஊர்ப் புராணவுரையே உண்மை வரலாறாமெனக் கடைப்பிடிக்க' (மறைமலையடிகள், 1957:9) அடிகள் குறிப்பிடும் இக்கருத்தும் ஆதியில் மரத்தடியிலேயே கோவில் அமைந்திருந்தது என்ற கருத்தையே அரண் செய்வதென உறுதியாகக் கூறலாம்.

திருமால் கோவில் தலமரங்களுக்கும் கதைகள் வழங்கப்படுகின்றன. திருக்கூடல் என்னும் பாண்டிநாட்டுக் கோவிலில் கதலீவனத்திடையே சுவாமி இருந்தார் எனவும், திரு அரங்கம் கோவில் வனத்திடையே அமைந்திருந்தது எனவும் கூறுகிறார்கள். திருஆதனூர், திருப்புள்ளம் பூதங்குடி ஆகிய சோழநாட்டுத் திருத்தலங்களிலும், திருவில்லிப்புத்தூர் என்னும் பாண்டிநாட்டுத் தலத்திலும் திருமால் மரத்தடியில் அமர்ந்ததாகக் கூறுகிறார்கள். மலை நாட்டுக் கோவிலான திருஅனந்தபுரத்துள் இலுப்பை மரப் பொந்திலிருந்து பெருமாள் தோன்றி சேவை சாதித்ததாகத் தலவரலாறு குறிப்பிடுகிறது. திருநந்திபுர விண்ணகரம் எனும் சண்பக வனத்துச் சண்பக மரத்தடியில் அம்மனும், திரு ஆலிதிருநகரியின் வில்வமரத்தடியில் யோக நரசிம்மரும், திருக்கண்ணங்குடியின் மகிழ மரத்தடியில் முனிவரும், திருவெள்ளக்குளத்துப் புரச மரத்தடியில் சுவேத மன்னரும், திருஅன்பிலில் தாழை தேவியும், திருச்சேறை அரச மரத்தடியில் காவிரி அன்னையும், திருமாலிருஞ் சோலையில் மலையத்துவச பாண்டியனும் தவம் செய்த தாகக் கதைகள் கூறப்படுகின்றன. பாண்டி நாட்டுத் திருக்குருகூர் எனப்படும் ஆழ்வார் திருநகரியின் புளியமரம் ஆதிசேஷன் அவதாரம் எனவும், திருக்குறுங்குடியில் பிராமணனும் பிரம்ம ராட்சசனும் பனை மரமாக மாறி நிற்கிறார்கள் எனவும், திருத்துழாய் தேவி பூமியில் சிறந்த திருவிண்ணகர் என்னும் தலத்தில் தலமரமான துளசிச் செடியாக நிற்கிறாள் எனவும் உருமாற்றக் கதைகள் கூறப்படுகின்றன. திருத்தண்கால் தலத்தின் தலமரமான ஆலமரமே தண்காலகிரி என்னும் மலையாக மாறிற்று என்று கூறுகிறார்கள்.

திருமால் கோவில் தொடர்பாகக் கூறப்படும் கதைகளும் பெருவாரியாக ஆதி கோவில் மரத்தடியில் அமைந்தது என்பதை நிறுவும் சான்றுகளாகவே காணப்படுகின்றன. இக்கதைகள் எண்ணிக்கையில் குறைந்திருப்பினும் அவற்றின் வகைகள் சிவன் கோவில் கதைகளின் வகை களைப் போன்றே அமைந்துள்ளமையை நோக்க, சிவன் கோவில் -திருமால் கோவில் என்ற வேற்றுமையின்றி அனைத்துக் கோவில்களும் ஆதியில் மரத்தடியில் அமைந்து பின்னாளில் அடியவர் தம் திருப்பணிகளால் இன்றுள்ள நிலையை எய்தின என்று முடிவுசெய்ய இயலும்.

## தலமரங்கள் —சில விவாதங்கள்— விளக்கங்கள்

சிவஸ்தல மஞ்சரி, தலபுராணங்கள், தல வரலாறுகள் ஆகியன குறிப்பிடும் சில தலங் களின் தல மரங்களுக்கும் கள ஆய்வின்வழி சேகரித்த தலமரங்கள் பற்றிய செய்திகளுக்கு மிடையே முரண்பாடுகள் காணப்படுகின்றன.

திருத்துருத்தி தலத்தின் தலமரம் உக்தாலம் எனத் தல வரலாறு குறிக்கிறது. ஆனால் மக்கள் தலமரத்தின் பெயரைக் குற்றாலம் என்றே கூறுகிறார்கள். உக்தாலம் என்ற பெயர் மருவி, பேச்சு வழக்கில் குற்றாலம் எனத் திரிந்து வழங்குகிறது எனலாம். இந்த மரம் தமிழ் நாட்டு எல்லைக்குள் வேறு எந்த திருக்கோவிலிலும் இருப்பதாகத் தெரியவில்லை. இதன் மலரை எடுத்து ஆய்ந்ததில் இது புன்னையினத்தைச் சார்ந்த 'கார்சீனியா' (Garcinia Guttiferae) என்னும் தாவரமாகலாம் என்று தோன்றுகிறது. இம்மரம் தென்னிந்தியப் பகுதியில் மிக அருகியே காணப்படும் என்ற கூற்று இதனை மேலும் தெளிவாக்குகிறது.

திருமயேந்திரப்பள்ளியின் தலமரம் கண்டல். ஆனால் திருப்பதிகக் குறிப்பு வில்வத்தைத் தலமரமாகச் சுட்டுகிறது. வில்வம் பொதுவாகத் திருக்கோவில்களில் வளர்க்கப்படும் மரமாத லால் கண்டல் தலமரமாகலாம் என்று எண்ணத் தோன்றுகிறது.

திருஅம்பர் மாகாளத்தின் தலமரம் கருங்காலி என்கிறார்கள். ஆனால் திருஅம்பர்ப் புராணம் மருதமரம் என்று குறிப்பிடுகிறது.

'மேற்கில் மருத மரத்தடியில் மாகாளேசம்...'

(மீனாட்சி சுந்தரம் பிள்ளை, 1965:XXV)

'மேவுவர் மேல்பா லருச்சு னத்தின்
திருநீழற்கீழ் மாகாளே சுரரிருப்பார்...'

(மீனாட்சி சுந்தரம் பிள்ளை, 1965:143)

அர்ச்சுனம் என்று தலபுராணம் குறிக்கும் மருத மரமோ, அன்றி கருங்காலி மரமோ இன்று தலத்தில் இல்லை. எது தலமரம் என்பது குறித்து மேலும் விரிவாக ஆராய வேண்டியுள்ளது. மரபுகள் மறந்தும் மறைந்தும் போவதற்கு இது ஒரு சான்று.

திருஅன்னியூரின் அர்ச்சகர் தலமரம் குருந்து என்கிறார். தலவரலாறு எலுமிச்சை என்றே குறிப்பிடுகிறது. 'அம்பிகை சந்நதிக்கு நேரே தெற்குப் பக்கம் ஒரு வாயில் இருக்கிறது. அதன் வழியே பிரகாரத்துக்கு வந்தால் ஒரு இலிங்கமும் அதன் அருகே எலுமிச்சை மரமும் தென்படுகின்றன. அங்குதான் சிவபெருமான் அக்கினி பகவானுக்குக் காட்சியருளினார் என்று சொல்லப்படுகிறது. ஆதிமூலலிங்கம் இம்மூர்த்தியென்று கூறுகின்றனர். அந்த எலுமிச்சை தான் தலவிருட்சம்' (கலியாணம், 1971:5). இன்று தலத்திலும் எலுமிச்சை மரமே உள்ளது.

திருஅம்பர்ப் பெருந்திருக்கோவிலின் தலமரம் புன்னாகை என்று சிவஸ்தல மஞ்சரி சுட்டுகிறது. தலபுராணம், தலமரத்தைப் புன்னாகம் எனவும், தலத்தைப் புன்னை வனம் எனவும் குறிப்பிடுகிறது, புன்னாகம் என்பதற்கு புன்னையின் விசேடம் என்பது அகராதி காட்டும் பொருள். இதனையே திருஅம்பர்ப் புராணமும்,

'புன்னையாற் புன்னாகவன மாதோ'

(மீனாட்சி சுந்தரம் பிள்ளை, 1965:90)

என்று குறிப்பிடுகின்றது. இதனால் புராணம் புன்னாகம் எனக் குறிப்பது புன்னை மரத்தையே என்பது தெளிவு.

திருவலிவலத்தின் தலமரம் புன்னை. ஆனால் தலவரலாறு கொன்றைவனம், வில்வவனம் எனக் குறிப்பிடுவதைக் காணும்போது யுகந்தோறும் மாறிவரும் தலமரங்களாகப் பிற தலங்களில் கூறப்படுவன போன்று இங்கும் கொன்றை, வில்வம் ஆகியன தலமரங்களாக இருக்கலாமோ என்ற ஐயம் எழுகின்றது.

திருநாகைக் காரோணத்தின் தலமரம் மா என சிவஸ்தல மஞ்சரி குறிப்பிடுகிறது. தலத்தில் உள்ள மாமரத்தை இன்று தலமரம் என்று கூறுகின்றனர். ஆனால் திருநாகைக் காரோண புராணத்தின் நாகநாதப் படலத்தில் புன்னாகம், புன்னாக வனம் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

'புள்ளலை மலர்நீர் வாவிப் பாம்புரம் பொருந்திவாழும்
வள்ளலை குருச்சித் தேத்தும் வாளராக் குலத்து வேந்தன்
விள்ளலை யமையா வாங்கும் விரைந்தரு ளாமை யெண்ணிக்
கள்ளலை மலர்ப் புன் னாகக் காரோணங் கருதிவந்தான்.
எறிதிரைக் கடனா வாய்நின் றழியும் புன்னாகமெங்கும்
வெறிமணங் கமழ நாளும் வீசுபுன் னாக மெங்கும்
செறிமனை யெனும் பேர் பூண்டு திருவம் புன் னாகமெங்கும்
கள்ளலை மலர்ப் புன் னாகக் காரோணங் கருதி வந்தான்.'

(மீனாட்சி சுந்தரம் பிள்ளை, 1970:330)

திருநாகைக் காரோணம் ஒரு கடற்கரைத் தலம். கடற்கரையில் புன்னை மரங்கள் மிகுதியாகக் காணப்படும். திருவேட்டக்குடி, திருமறைக்காடு, திருப்புனவாசல் போன்ற கடற்கரைப் பகுதிகளிலுள்ள திருக்கோவில்களிலும் புன்னையே தலமரமாகப் பாதுகாக்கப்படுகிறது. எனவே இங்கும் தலபுராணம் கூறும் புன்னையே தலமரம் எனக் கொள்ளலாம்.

திருகற்குடி எனும் தலத்தின் தலமரம் வில்வம் என்று கூறுகிறார்கள். பிற கோவில்களைப் போல் தனி ஒரு மரத்தைத் தலமரமாகக் கூறாது கிழக்கு, மேற்கு, தெற்குப் பக்கங்களில் உள்ள மூன்று வில்வமரங்களையும் தலமரம் என்கிறார்கள். இத்தலத்தின் தலமரம் வில்வம்தானா என்ற ஐயம் எழுகிறது.

திருமுக்கீச்சரம் என்னும் உறையூர் கோவிலின் தலமரமாக வில்வத்தை சிவஸ்தல மஞ்சரி குறிப்பிடுகிறது. தலவரலாறும் வில்வமே தலமரம் என்று குறிக்கிறது. தலத்தின் பொறுப்பிலுள்ளவர்கள் தலமரம் எதுவெனத் தெரியவில்லை என்று குறிக்கிறார்கள். மரபு மறைந்து மறந்து வருவதற்கு இதுவும் ஓர் எடுத்துக்காட்டு எனலாம்.

பிரான்மலை என்று இன்று வழங்கும் திருக்கொடுங்குன்றம் தலத்தின் தலமரம் 'பெயரில்லா விருட்சம்' என்று கூறுகிறார்கள். ஆனால் அதன் மலரைக் கொண்டு ஆராய்ந்த தில் 'கப்பாரிஸ் ஸைலானிக்கா' (Capparis Zeylanica–capparidaceae) என்னும் தாவரமாக இருக்கலாம் என்று தோன்றுகிறது.

திருமால் கோவிலான திருமாலிருஞ்சோலையின் தலமரம் 'ஜோதி விருட்சம்' எனப்படுகிறது. அதனை அசோக மரம் என்றும் முன்பு கோவிலினுள் இருந்த மரம் தற்போது இல்லை என்றும் அக்கோவில் ஸ்தானிகர் திரு. இராகவன் கூறுகிறார். 'இக்கோயிலுக்குத் தலவிருட்சம் ஜோதிவிருட்சம். இதையே அரசமரம் என்கிறார்கள்' (ஸ்ரீ கள்ளழகர் கோயில் வரலாறு, 153). தலவரலாறு குறிப்பிடும் அரச மரம் கோவிலருகே உள்ளபோதும் தற்போது அதனைத் தலமரமாகக் குறிப்பிடாததைப் பார்க்கையில் அசோகமரமே ஜோதி விருட்சமாகலாம் என்ற எண்ணம் மேலிடுகிறது.

தலமரம் எது என நேரடியாகக் குறிப்பிடாத இரு தலங்களில் கிடைக்கும் குறிப்புகள் தலமரத்தைத் தெரிந்துகொள்ளத் துணை புரிகின்றன. 'திருக் கலிக்காமூர்த் திருப்பதிகம்' நூலில் 'ஸ்ரீ வில்லவனேஸ்வரர் ஸ்ரீ அகிலாண்டேஸ்வரியுடன் எழுந்தருளியுள்ள ஒரு தனிக் கோவிலும் உள்ளது' என்ற குறிப்பு காணப்படுகிறது (ப. 8). இங்கு கூறப்படும் இறைவன் பெயரான ஸ்ரீவில்லவனேஸ்வரர் என்பது வில்வம் என்ற தலமரத்தின் அடிப்படையில் அமைந்த பெயர் என்று தோன்றுவதால் வில்வமே தலமரம் என்று கூறலாம்.

மலைநாட்டின் திருமால் கோவிலான திருவல்லவாழ் தலத்துக்கு மல்லிகாவனம் என்ற பெயர் வழங்குவதாகக் கள ஆய்வின் மூலம் தெரிய வந்தது. எனவே மல்லிகை அக்கோவில் தலமரமாக இருக்கலாம் என்று தோன்றுகிறது.

## தலமரங்களின் தாவர இனப்பெயர்கள்—சில விளக்கங்கள்

பி. ஜி. எல். சாமி அவர்கள் எழுதியுள்ள கட்டுரையில்* குறிப்பிட்டுள்ள தாவரப் பெயர்களும் சில தாவரங்கள் தொடர்பான செய்திகளும் மயக்கம் தருவனவாக உள்ளமையால் அவற்றிற்குத் தெளிவு காண்பது அவசியமாகிறது.

குற்றாலம் என்ற தற்போதைய பெயர் ஆலமர வகையைச் சுட்டுவதாகவும் குறும்பலா என்ற பெயர் பல வகையைக் குறிப்பதாகவும் உள்ளது. சம்பந்தர் குறும்பலா குற்றாலம் ஆகியவற்றின்மீது தனித்தனியாகப் பத்துப் பாடல்கள் பாடியுள்ளார். இவை இரண்டும் இன்றைய கோவில் அமைப்பினுள் அடுத்தடுத்து அமைந்திருந்த இருவேறு ஆலயங்களைக் குறிப்பிடுவனவாக இருக்கலாம். தற்போது முக்கிய கோவிலில் ஒரு பலாமரம் மட்டுமே தலமரமாகக் காணப்படுகிறது. ஆனால் ஆலயப் பிரகாரத்தினுள் ஆலமரம் இல்லை† என்று பி. ஜி. எல். சாமி குறிப்பிடுகின்றார்.

---

* "Sources for a history of plant Science in India". —*Transactions of the Archeological Society of South India*-1965-68 : 23-62

† The present name (Kurrālam) is indicative of a species of Ficus, where as the old name (Kurumpalā) refers to a species of Artocarpus. Sambandar has sung one decade each on Kurrālam and Kurumpalā. The two are beleived to refer to two separate shrines in the present temple complex. In the main shrine, a plant palā (Artocarpus) is being looked upon as the Sthala—Vṛkṣa where as no indication of āl (Ficus species) is seen anywhere in the complex. —*Transactions of the Archeological Society of South India*-1965-68 : 33

திருக்கொட்டையூரின் தலமரமான கொட்டைச் செடியினைக் குறிப்பிடுகையில், 'தல விருட்சம் ஆமணக்கு 19ஆம் நூற்றாண்டின் மத்தியில் ஆப்பிரிக்காவிலிருந்து அறிமுகப்படுத்தப் பட்டு பயிரிடப்பட்டது'* என்கிறார். அக்கோவில் தலவரலாறு, 'கொட்டையூரின் தலவிருட்சம் கொட்டைச் செடி. இது ஏரண்டம் எனவும் பெயர் பெறும். அதன்கீழ் ஏரண்ட முனிவர் தவம் செய்தார்' என்று கூறுகிறது. ஏரண்டம் என்பது ஆமணக்குச் செடியின் மறுபெயர் என்று வைத்திய மூலிகை அகராதியால் தெரிய வருகிறது. ஆமணக்குச் செடியின் இலை, விதையிலிருந்து எடுக்கப்படும் நெய் ஆகியன தமிழ் வைத்தியத்தில் மிகப் பழங்காலந்தொட்டே பயன்படுத்தப் பட்டு வருவதற்கு ஏடுகளிலிருந்து பதிப்பிக்கப்பட்ட மருத்துவ நூல்கள் சான்று தருகின்றன.

**ஆமணக்கு—இலை**

'மிக்க வெழுங் காமாலை மிஞ்சிமூலக்கடுப்பும்
துக்கமிகு முந்திவலித் தொல்லைபோம்—மக்கட்கு
நாமணக்கப் பாலூட்டும் நாரியற்குப் பாற்சுரக்கும்
ஆமணக்கின் சீரிலையா லாம்' (கண்ணுசாமிப் பிள்ளை, 1952:57).

**ஆமணக்கு—நெய்**

'ஆமணக்கு நெய்யா லனைவர்க்கு முண்டுநலம்
பூமணக்கு மேனி புரிகுழலே!—வாய்மணக்க
கொள்ளில் வயிறுவிடுங் கோரமுள்ள வாயுவறு
முள்ளில்வரு குன்மம்போ மோர்' (கண்ணுசாமிப் பிள்ளை, 1952:58).

இதே கருத்து கண்ணுசாமிப் பிள்ளையின் நூலான பதார்த்த குண விளக்கத்தின் மூல நூலான பதார்த்த குண சிந்தாமணியிலும் (44) குறிப்பிடப்பட்டுள்ளது.

தமது கட்டுரையின் இறுதியில் பி. ஜி. எல். சாமி அவர்கள் தரும் தாவர இனப் பெயர் அட்டவணையில் உள்ள சில பெயர்கள் மயக்கம் விளைப்பனவாக உள்ளன. பராய், பூளை ஆகிய இரண்டிற்கும் இலவமரத்தின் தாவர இனப் பெயரான 'பம்பாக்ஸ்': 'மலபாரிக்கம்' (Bombax Malabaricum) என்ற பெயரையே தருகிறார். பூளை என்பது கண்பூளை என்னும் சிறிய செடியாகும். திருஇரும்பூளை எனும் தலத்தின் தலமரமான இச் சிறு செடி கோவில் பிரகாரம் எங்கும் நிறைந்திருப்பதை இன்றும் காணலாம். பூளைச் செடிக்கும் இலவமரத்துக்கும் எந்த விதத் தொடர்பும் இல்லை. பூளைச் செடி 'ஏர்வா லானேட்டா' (Aerua lanata) என்று தாவர இயலாரால் குறிக்கப்படுகிறது. திருப்பராய்த்துறையின் தலமரமான பராய் மரத்துக்கும் இலவ மரத்துக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை என்பதைக் காண்போர் எளிதில் உணரமுடியும். பராய் மரம் என்பது ஆல், அத்தி இனத்தைச் சார்ந்த 'ஸ்ரொபிலஸ் ஆஸ்பர்' (Strobilus asper) என்ற தாவரமாகும் என்பது அதன் மலரை ஆராய்ந்ததன் வாயிலாகத் தெரிய வந்தது.

இலுப்பை மரத்தை 'பேஸியா லேட்டிபோலியா' (Bassia latifolia) எனக் குறிப்பிடும் பி. ஜி. எல். சாமி வஞ்சியையும் அப்பெயராலேயே குறிக்கிறார். 'வஞ்சி நுண்ணிடை' (தேவா. 801.11:1) என இடைக்கு ஒப்புமை கூறப்படும் வஞ்சிக் கொடிக்கும் இலுப்பை மரத்துக்குமான தொடர்பு புரியவில்லை. வைத்திய மூலிகை அகராதி வஞ்சியை சீந்தில் கொடி என்று கூறுகிறது. பதார்த்த குணவிளக்கம் நூல் சீந்தில் கொடிக்கு இணையான தாவரப் பெயராக 'காக்குலஸ் கார்டிபோலியஸ்' (Cocculus cordifolius) என்பதைக் குறிக்கிறது.

பண்டைய தமிழகத் தாவரங்களை இனங்காணும் முயற்சிக்கு இன்று துணைபுரிவன இலக்கியங்களும் சித்த வைத்திய நூல்களுமேயாம். இலக்கியச் சான்றுகள் மரம் செடி கொடி களின் வெளித் தோற்றம், இலை அமைப்பு, மலர்களின் நிறம், காய், கனி ஆகியனவற்றை ஒப்புமையாகவும் வர்ணனையாகவும் தருகின்றன. அன்றாட வாழ்வில் மருந்தாகப் பயன்பட்ட தாவர இனங்களை அறிய சித்த மருத்துவ நூல்கள் துணை நிற்கின்றன. இவ்விரு சான்றா தாரங்களுமே தலமரங்களை இனங்காணத் துணை புரிவனவாம்.

* In any case sthla-Vrkṣa, āmanakku (castor), is an exotic cultivator in India, introduced from Africa in the middle of the 19th Century. —*Transactions of the Archeological Society of South India*, 1965-68 : 34

# முடிவுரை

முற்காலத்தில் வழிபடு பொருட்களாக விளங்கிய மரங்கள் பிற்காலத்தில் தலமரங்களா மாற்றியமைந்த நிலையை வரலாறு காட்டுகிறது. இயற்கையோடு இயைந்த எளிய வாழ்வு வாழ்ந்த அக்கால மனிதனின் வழிபாடுகள்—மரமோ, உருவங்களோ எவையாயினும்—வெயில் நாடான கீழ்நாட்டில் மரநிழலில் செய்வது எளியதாகவும் அழகியதாகவும் அவனுக்கு எளிதில் இயலக்கூடியதாகவும் இருந்திருக்கலாம். அதனால் மத வழிபாட்டில் மரம் நெருக்கமாக இணைந்தது.

பண்டைய வழிபாட்டில் மனிதன் எளிதாகக் கடவுளுக்குப் படைப்பன இலை, பூ, பழம் முதலிய மரம்படு பொருட்களே. இதற்கும் வழிபாட்டிடத்தில் மரங்கள் இருப்பது இன்றியமையாததாயிற்று. சான்றாக வறண்ட பகுதிகளிலுள்ள பல திருக்கோவில்களில் பூ முதலியன கிடைக்க வாய்ப்பில்லை. அவ்விடங்களி வில்வம், வன்னி போன்ற வறண்ட பகுதியிலும் வளரும் மரங்களையே தலமரங்களாக வளர்த்து அவற்றின் இலையை நாள் வழிபாட்டில் மலருக்கு இணையாகப் பயன்படுத்துவர். இங்ஙனம் வழிபாட்டில் பயன்படும் தலமரங்கள் வழிபாட்டுத் தேவைக்காகப் பாதுகாக்கப்படுகின்றன.

பண்டைக்கால மக்கள் அறிவியல் வளர்ச்சி அடைந்திருக்கவில்லை. இயற்கையில் தங்களால் அறிந்துகொள்ள முடியாதவைகள் அல்லது சில வேளைகளில் தோன்றும் அதிசய நிகழ்வுகள் என்பனவற்றை இன்றுபோல அறிவியல் அடிப்படையில் புரிந்துகொள்ள இயலாத காரணத்தால் தெய்வச் செயல் என முடிவு செய்தனர். இயற்கையின் மாறுபாடமைந்த மரங்கள் கடவுட் செயலாகக் கொண்டதால் அம்மரத்தில் இறைவன் இருப்பதாக எண்ணியோ, தான் விரும்பிய இறைவனின் திருவுருவத்தை வைத்து வழிபாடு நிகழ்த்தியோ அம்மரத்தைப் போற்றினர். இன்றைய மனிதன் அவற்றின் அறிவியல் தன்மைகளை ஆய்ந்து இயற்கையின் மாறுபாடுகள் என்று பாகுபடுத்திக் காட்டி அருங்காட்சியகங்களில் பாதுகாக்கிறான். அன்றைய மனிதனுக்குத் திருக்கோவிலே இத்தகு பொருட்காட்சிசாலையாக விளங்கியது எனக் கொள்வதில் தவறில்லை. காலம் மாறி நவீன அறிவியல் அறிவு பெற்றபோதிலும் தெய்வத்தன்மை பொருந்தியன எனக் குறிப்பிட்டு அறிவியல் அடிப்படையில் அதன் சிறப்புகளை ஆய்வு செய்ய அனுமதிப்பதில்லை.

இயற்கையில் தோன்றும் மாறுபாடமைந்த மரங்களிலிருந்து கிடைக்கும் பொருட்களைக் குறித்த பயத்தாலோ அன்றிப் பிற காரணங்களாலோ மனிதர்கள் தாங்கள் அனுபவிக்காமல் இறைவன் செயல் என அவனுக்கே படைத்து வழிபடுவதற்காகவும் தலமரங்கள் எனப் பாதுகாக்கப்பட்டிருக்கலாம்.

மருத்துவத் தன்மை கொண்ட அரிய மரங்கள் இறைத்தன்மை உடையனவாகக் கருதப்பட்டு வழிபாட்டுடன் இணைக்கப்பட்டிருக்கலாம். நோய் தீர்க்கும் அரிய மருந்துகள் மக்களால் முற்றிலும் அழிக்கப்படாமல் பாதுகாக்கப்பட்டு அனைவருக்கும் பயன்படும் வகையில் திருக்கோவில் வழிபாட்டுடன் இணைக்கப்பட்டிருக்கலாம்.

மனிதனது பண்பாடு, வழிபாட்டு முறைகள் ஆகியன நாகரிக வளர்ச்சியின் விளைவாக மாறியபோதும் திருக்கோவில் வழிபாட்டில் மரங்களின் செல்வாக்குக் குறையவில்லை. வழிபாட்டோடு இரண்டறக் கலந்துவிட்ட நிலையில் இன்று புதிதாகக் கட்டப்படும் கோவில்களிலும் தலமரம் வைப்பது சமய மரபாகப் பின்பற்றப்படுகிறது. ஆதியில் தலத்துக்குக் காரணமான மரமே தலமரமாகக் கருதப்பட, இன்று வெறும் சமயச் சின்னமாக வளர்க்கப்படுகிறது. தலமரம்

தொடர்பான கதைகள், நம்பிக்கைகள் போன்றனவும் தலமரங்கள் வழிபாட்டோடு இணைந்த் நிலையை வலியுறுத்துகின்றன. இத்தகைய கதைகள் தலமர மரபு அழியாமல் பாதுகாக்கப்படத் துணைபுரிவன எனலாம், இத்தகு கதைகளும் நம்பிக்கைகளும் செவிவழிச் செய்திகளாக நிலவும் நம்பிக்கைகளேயாகும். இவற்றின் அறிவியல் தன்மை ஆராய்ச்சிக்குரியது.

தலமரவழிபாடு, இயற்கைச் சூழலில் மரங்களைப் பாதுகாக்க ஆதிமனிதன் கண்ட எளிய முறை என்று கூறலாம். இன்று அறிவியல் வளர்ந்துள்ள நிலையில் மனிதனின் நலவாழ்வின் அடிப்படையான சுற்றுப்புறச் சூழல் பாதுகாப்பிற்கு மரங்களின் இன்றியமையாமையை உணர்ந்து 'வீட்டுக்கு ஒரு மரம் வளர்ப்போம்' 'காடு வளர்ப்போம்' என்பன போன்ற சிந்தனைகள் பெருகி வருகின்றமையைக் காண்கிறோம்.

# தலமரங்கள்—சிவன் கோவில்

| தாவரம் | ஆங்கிலப் பெயர் | தாவர இனப் பெயர் | தாவரக் குடும்பம் |
|---|---|---|---|
| அகில் | Eagle wood | Aquilaria agallocha | Thymeliaceae |
| அரசு | Peepul tree | Ficus religiosa | Moraceae |
| அரளி | Indian oleander | Nerium oleander | Apocynaceae |
| ஆல் | Common Banyan | Ficus benghalensis | Moraceae |
| இலந்தை | Indian plum | Zizyphus jujuba | Rhamnaceae |
| இலுப்பை | Mahua of South India | Madhuca indica | Sapotaceae |
| உக்தாலம் | — | Gatcinia metal | Guttiferae |
| ஊமத்தை | Purple Datura | Datura | Solanaceae |
| எருக்கு | Madar Silk cotton | Calotropis gigantea | Asclepiadaceae |
| எலுமிச்சை | Acid lime | Citrus aurantifolia | Rutaceae |
| கடம்பு | Common Indian oak | Neolamarckia cadamba | Rubiaceae |
| கடுக்காய் | Indian Myrobalan | Terminalia belerica | Combretaceae |
| கதம்பம் (கடம்பு) | — | — | — |
| கப்பல் அலரி (அரளி) | Temple tree | Plumeria rubra | Apocynaceae |
| கருங்காலி | Sundara tree | Acacia catechu | Mimosaceae |
| கல்அத்தி | Elliptic leaved fig | Ficus racemosa | Moraceae |
| காட்டாத்தி | River ebony | Diospyros malabarica | Eberaceae |
| காரை | Common honey thron | Canthium parviflorum | Rubiaceae |
| கிளுவை | Hill Balsom tree | Commiphora caudata | Burseraceae |
| குருந்து | Wild lime | Atalantia racemosa | Rutaceae |
| கொட்டைச்செடி (ஆமணக்கு) | Caster plant | Ricinus communis | Euphorbiaceae |
| கொன்றை | Indian laburnum | Cassia fistula | Caesalpiniaceae |
| கோங்கு | Red silk cotton | Bombax ceiba | Bombacaceae |
| கோரை | Sedge grass | Cyperus rotundus | Cyperaceae |
| சண்பகம் | Champak | Michelia champaca | Magnoliaceae |
| சதுரக்கள்ளி | A plant of the dry places | Euphorbia antiquorum | Euphorbiaceae |
| சந்தனம் | Sandal wood | Santalum album | Santalaceae |
| செருந்தி | Panicled golden blossomed pear | Ochna obtusata | Ochnaceae |

| | | | |
|---|---|---|---|
| தர்ப்பைப்புல் | — | Imperata cylindrica | Gramineae |
| தாழை | Fragrent screw-pine | Pandanus odoratissimus | Pardanaceae |
| தில்லை | Mountain slender Tigers milk | Excoecaria agallocha | Euphorbiaceae |
| துளசி | Sacred Basil | Ocimum tenuiflorum | Labiatae |
| தெங்கு | Coconut palm | Cocos nucifera | Palmae |
| தேற்றா | Clearing nut | Strychnos potatorum | Loganiaceae |
| நந்தியாவட்டம் | Milky jasmine | Tabernaemontana coronaria | Apocynaceae |
| நாகலிங்கம் | Cannon ball tree | Couroupita guianensis | Lecythidaceae |
| நாரத்தை | Mandarin Orange | Citrus limon | Rutaceae |
| நாவல் | Common black plum | Syzygium cumini | Myrtaceae |
| நெல்லி | Gooseberry tree | Phyllanthus emblica | Euphorbiaceae |
| பராய் | Sardpaper tree | Streblus asper | Moraceae |
| பலா | Jack tree | Artocarpus heterophyllus | Moraceae |
| பன்னீர் | Tree jasmine | Guettarda speciosa | Rubiaceae |
| பனை | Palmyra palm | Borassus flabelliber | Palmae |
| பாதிரி | Fragrent Trumpet flower | Stereospermum suaveolens | Bignoniaceae |
| பாரிஜாதம் | Tree of sorrow | Nyctanthes arbor-tristis | Oleaceae |
| பாலை | Easter tree | Wrightia tinctoria | Apocynaceae |
| பிஞ்சிலம் | Large flowered Jasmine | Jasminum grandiflorum | Oleaceae |
| பிரம்பு | Common ratton of South India | Calamus rotang | Palmae |
| | | | |
| புரசு | Flame of the forest | Butea monosperma | Papilionaceae |
| புளி | Indian date | Tamarindus indica | Caesalpiniaceae |
| புன்கு | Indian Beach | Pongamia pinnata | Papilionaceae |
| புன்னை | Alexandrian Laurel | Callophyllum inophyllum | Guttiferae |
| பூளை | Javanese Wool plant | Aerva lanata | Amarantaceae |
| மகிழம் | A precious flower tree | Mimusops elengi | Sapotaceae |
| மந்தாரம் | Mountain Ebony | Bauhinia tomentosa | Caesalpiniaceae |
| மருதம் | Murdha | Terminalia arjuna | Combretaceae |
| மல்லிகை | Musk jasmine | Jasminum multiflorum | Oleaceae |
| மா | Mango tree | Mangifera indica | Anacardiaceae |
| மாதவி | Common delight of woods | Hiptage madablota | Malpighiaceae |
| மாவிலங்கை | Sacred lingam tree | Crateva magna | Capparidaceae |
| முல்லை | Common jasmine | Jasminum auriculatum | Oleaceae |
| வஞ்சி (கொடி) | — | Cocculus cordifolius | Menispermaceae |

| | | | |
|---|---|---|---|
| வன்னி | Indian mesquit | Prosopis cineraria | Mimosaceae |
| வாகை | Common sirisa | Albizzia lebbek | Mimosaceae |
| வால்மிளகு | Fragrent pepper | Piper cubeba | Piperaceae |
| வாழை | Plantain | Musa paradisiaca | Musaceae |
| வில்வம் | A sacred tree | Aegle marmelos | Rutaceae |
| விளா | Wood apple tree | Limonia acidissima | Rutaceae |
| விழுதிச்செடி | —— | Cadaba fruticasa | Capparidaceae |
| வெள்வேலம் | White Babool | Acacia leucophlaea | Mimosaceae |
| வேம்பு | Neem tree | Azadirachta indica | Meliaceae |
| வேய் | Bamboo | Bambusa arundinacea | Gramineae |
| பெயரில்லா விருட்சம் | —— | Capparis species | Capparidaceae |

## தலமரங்கள்—திருமால் கோவில்

| | | | |
|---|---|---|---|
| அசோகம் | Asoka tree | Saraca asoca | Caesalpiniaceae |
| அரசு | Peepul tree | Ficus religiosa | Moraceae |
| ஆல் | Common Banyan | Ficus bengialensis | Moraceae |
| சண்பகம் | Champack | Michelia champaca | Magnoliaceae |
| தாழை | Fragrent screw-pine | Pandanus odoratissimus | Pandanaceae |
| துளசி | Sacred Basil | Ocimum tenuiflorum | Labiatae |
| நொச்சி | — | Vitex negundo | Verbenaceae |
| பலா | Jack tree | Artocarpus heterophyllus | Moraceeac |
| பன்னீர் | Tree jasmire | Guettarda speciosa | Rubiaceae |
| பனை | Palmyra palm | Borassus flabellifer | Palmae |
| பாதிரி | Fragrant trumpet flower | Stereospermum suvaeolens | Bignoniaceae |
| பாரிஜாதம் | Tree of sorrow | Nyctanthus arbor-tristis | Oleaceae |
| புளி | Indian date | Tamarindus indica | Caesalpiniaceae |
| புன்னை | Alexandrian Laurel | Callophyllum inophyllum | Guttiferae |
| மகிழம் | A precious flower tree | Mymusops elengi | Sapotaceae |
| மா | Mango tree | Mangifera indica | Anacardiaceae |
| வாழை | Plantain | Musa Paradisiaca | Musaceae |
| வில்வம் | A Sacred tree | Aegle marmelos | Rutaceae |

# துணைநூற் பட்டியல்

## தமிழ் நூல்கள்


1. அரங்க ராமாநுஜதாசன், 108–திருப்பதி ப்ரபாவம், இரத்தின நாயகர் அன்ட் சன்ஸ், சென்னை, 1977.

2. அருணாசலம், ப., பக்தி இலக்கியம் ஓர் அறிமுகம், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 1973.

3. அருணாசலம், மு., பூஞ்செடிகள், பாரிநிலையம், சென்னை, 1960.

4. அருணை வடிவேல் முதலியார், சி., காஞ்சிப் புராண உரைநடை, முத்தமிழ் அச்சகத்தார், காஞ்சிபுரம், 1977.

5. — — — — — — — — — — — — தேவாரத் திருப்பதிகங்கள்–ஏழாம் திருமுறை (சுந்தரமூர்த்தி சுவாமிகள்), தருமையாதீன வெளியீடு, தருமபுரம், 1964.

6. ஆரவமுதாசாரியார், திருச்சுழியல் புராணம், இராமநாதபுரம் சமஸ்தான தேவஸ்தான வெளியீடு, இராமநாதபுரம், 1967.

7. ஆறுமுக நாவலர், கே., இந்துமத இணைப்பு விளக்கம், தொண்டன் காரியாலய வெளியீடு, நாகர்கோவில், 1963.

8. இராகவையங்கார், மு., ஆராய்ச்சித் தொகுதி, ப. பெ. இ., சென்னை, 1938.

9. இராசமாணிக்கனார், மா., பத்துப்பாட்டு ஆராய்ச்சி, சென்னைப் பல்கலைக் கழக வெளியீடு, சென்னை, 1970.

10. — — — — — — — — — — — — பெரிய புராண ஆராய்ச்சி, பாரிநிலையம், சென்னை, 1978.

11. இராமலிங்கத் தம்பிரான் (ப. ஆ.), புள்ளிருக்குவேளூர் ஸ்ரீவைத்தியநாத சுவாமி திருக்கோயில் கும்பாபிஷேக மலர், வைத்தீஸ்வரன் கோயில் ஸ்ரீவைத்தியநாத சுவாமி தேவஸ்தானம், தருமபுரம், 1970.

12. கண்ணுசாமிப் பிள்ளை, சி., சித்த வைத்திய பதார்த்த குணவிளக்கம் (மூலவர்க்கம்), B. இரத்தின நாயகர் அன் சன்ஸ், சென்னை, 1952.

13. கந்தசாமிப் பிள்ளை, அ. (கு. ஆ.), தேவாரத் திருப்பதிகங்கள்—மூன்றாவது திருமுறை (திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார்), தருமையாதீன வெளியீடு, தருமபுரம், 1955.

14. கந்தசாமி முதலியார், சி., வைத்திய மூலிகை அகராதி, இரத்தின நாயகர் அன் சன்ஸ், சென்னை, ஆ. இ.

15. கலியாணம், ஜி., — திருப்புவனவாயில் தலவரலாறு, தேவஸ்தான வெளியீடு, திருப்புவனவாயில், முதற்பதிப்பு, 1965.

16. ———————— — சிவாலயம் இரத்தினகிரித் தலவரலாறு, ஸ்ரீ இரத்தின கிரீஸ்வரர் தேவஸ்தான வெளியீடு, இரத்தினகிரி, 1970.

17. ———————— — திருஅன்னியூர்த் தலவரலாறு, ஸ்ரீ ஆபத்சகாயேசுவர சுவாமி கோயில் வெளியீடு, பொன்னூர், 1971.

18. ———————— — திருவெண்காட்டுத் தலவரலாறு, ஸ்ரீசுவேதாரண்யேசுவர சுவாமி தேவஸ்தான வெளியீடு, திருவெண்காடு, ஆறாம் பதிப்பு, 1976.

19. கழகப் புலவர் குழு, — சிவப்பதிகள் வரலாறு (வழிக்குறிப்புடன்), கழக வெளியீடு, சென்னை, 1977.

20. குமாரசாமி குருக்கள், — திருவைத்தியநாத சுவாமி திருப்புள்ளிருக்கு வேளூர் திருக்கோயில் மகாகும்பாபிஷேக விழா மலர், திருவைத்தியநாத சுவாமி திருக்கோயில் வெளியீடு, தருமபுரம், 1970.

21. குருபரன் பிள்ளை, டி.எம். (ப. ஆ.), — மூவர்தேவாரம் —தலமுறை (அடங்கன் முறை) ஒன்று முதல் ஏழு திருமுறைகள், பன்னிரு திருமுறைப் பதிப்பு நிதி வெளியீடு, ஸ்ரீகுமர குருபரன் சங்கம், ஸ்ரீவைகுண்டம், 1968.

22. சண்முக சுந்தரம், ல., — தமிழும் தாவரமும், சிவகாசி, முதற்பதிப்பு, 1970.

23. சத்தியமூர்த்தி, எஸ்., — சிவலிங்க வழிபாடு, ஜெயகுமாரி ஸ்டோர்ஸ், நாகர்கோவில், 1969.

24. சாமி, பி. எல்., — சங்க இலக்கியத்தில் செடி கொடி விளக்கம், கழக வெளியீடு, சென்னை, 1967.

25. சிங்காரவேலன், சொ., — திருஞானசம்பந்தர் வரலாற்றாராய்ச்சியும் தேவாரத் திறனாய்வும், கழக வெளியீடு, சென்னை, 1969.

26. சிவஞானம், — திருஇரும்பூளை எனும் ஆலங்குடித் தலவரலாறு, திருக்கோயில் வெளியீடு, ஆலங்குடி, 1976.

27. சுப்பிரமணிய பிள்ளை, கா., — தமிழர் சமயம், கழக வெளியீடு, சென்னை, இரண்டாம் பதிப்பு, 1953.

28. ஜெய செந்தில்நாதன், பு. மா. — திருக்கச்சியேகம்பம் (ஸ்ரீ ஏகாம்பரநாதர்) கோயில் வரலாறு, திருக்காமாட்சியம்மை இடங்கொண்ட திருவேகம்ப நாதர் கோயில் தேவஸ்தானம், காஞ்சிபுரம், இரண்டாம் பதிப்பு, 1975.

29. ஞானப்பிரகாச பட்டாரகர், கமலை ஸ்ரீ., — புட்பவிதி, தருமையாதீன வெளியீடு, தருமபுரம், 1972.

30. தனிநாயக அடிகள், தமிழ்த்தூது, தமிழ் இலக்கியக் கழக நூற்பண்ணை, தூத்துக்குடி, ஆ. இ.

31. திரிகூடராசப்பக் கவிராயர், திருக்குற்றாலத் தலபுராணம், திருவாவடுதுறை ஆதீனம், திருவாவடுதுறை, 1973.

32. துரைசாமிப் பிள்ளை, சு., சைவ இலக்கிய வரலாறு, அண்ணாமலைப் பல்கலைக் கழக வெளியீடு, அண்ணாமலை நகர், முதற்பதிப்பு, 1958.

33. தேவநாதன் (ப. ஆ.), நாலாயிரத் திவ்யப்பிரபந்தம், சென்னை, 1971.

34. பரசுராம், ஏ. என்., வட திருமுல்லைவாயில் திருப்பதிகம், பாரதி விஷயம் பிரஸ், திருவல்லிக்கேணி, ஆ. இ.

35. பலபட்டடைச் சொக்கநா பிள்ளை, அழகர் கிள்ளைவிடு தூது, கழக வெளியீடு, சென்னை, 1977.

36. பாலகிருஷ்ணன், பி. ஆர். (ப. ஆ.), நாலாயிரத் திவ்யப் பிரபந்தம், இரத்தின நாயகர் அன் சன்ஸ், சென்னை, 1977.

37. மறைமலையடிகள், மாணிக்கவாசகர் வரலாறும் காலமும், பகுதி I, கழக வெளியீடு, சென்னை, மறுபதிப்பு, 1957.

38. மாதவதாசன், மயிலை., நாலாயிரத் திவ்யப் பிரபந்தம், இலட்சுமண முதலியார் ஸ்பெசிபிக் எண்டோமென்ட்ஸ், சென்னை, 1962.

39. மீனாட்சி சுந்தரம் பிள்ளை, மண்ணிப் படிக்கரைப் புராணம், இருப்பைப்பட்டு தேவஸ்தான வெளியீடு, இருப்பைப்பட்டு, 1956.

40. ——————————— திருஅம்பர்ப்புராணம், மகாமகோபாத்யாய டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் நூல் நிலைய வெளியீடு, 1965.

41. ——————————— திருநாகைக் காரோணப் புராணம், திருவாவடுதுறை ஆதீன வெளியீடு, திருவாவடுதுறை, 1970.

42. முருகவேள், ந. ரா., திருக்கோயில் மாத இதழ், இந்துசமய அறநிலைய ஆட்சித்துறை வெளியீடு, சென்னை, பிப்ரவரி, 1978.

### ஆசிரியர் பெயரின்றி காணப்படும் நூல்கள்

1. திருக்கொட்டையூர்—திருஇன்னம்பர்த் திருப்பதிகங்கள், ஞானசம்பந்தம் பதிப்பகம், தருமபுரம், 1977.

2. திருத்துருத்தித் தலவரலாறு (குத்தாலம்), ஸ்ரீ உக்தவேதே சுரசுவாமி தேவஸ்தான வெளியீடு, குத்தாலம், இரண்டாம் பதிப்பு, 1958.

3. திருப்பனங்காடு என வழங்கும் திருவன் பார்த்தன் பனங்காட்டூர்த் தலவரலாற்றுச் சுருக்கமும், வழிபாட்டுக்குரிய பஞ்சபுராணமும், பழனியப்பா பிரிண்டர்ஸ், காஞ்சிபுரம், ஆ. இ.

4. திருப்பனந்தாள் —திருஆப்பாடி—திருச்சேய்ஞலூர்த் திருப்பதிகங்கள்,
ஞானசம்பந்தம் பதிப்பகம், தருமபுரம், 1977.

5. திருப்புள்ளிருக்கு வேளூர்த் திருப்பதிகங்கள்,
ஞானசம்பந்தம் பதிப்பகம், தருமபுரம், 1976.

6. திருப்புன்கூர் தலவரலாறு,
திருக்கோயில் வெளியீடு, திருப்புன்கூர், ஒன்பதாம் பதிப்பு, 1971.

7. திருப்பைஞ்ஞீலி—திருப்பாச்சிலாச்சிராமத் திருப்பதிகங்கள்,
ஞானசம்பந்தம் பதிப்பகம், தருமபுரம், 1977.

8. திருவிடை மருதூர் ஸ்ரீமஹாலிங்க சுவாமிகோயில் மகாகும்பாபிஷேக மலர்,
ஸ்ரீமகாலிங்க சுவாமி தேவஸ்தான வெளியீடு, திருவிடை மருதூர், 1970.

9. புட்ப பலன்,
தருமையாதீனம் வெளியீடு, தருமபுரம், 1973.

### ஆங்கில நூற்கள்

1. COWDEN, D. C., **Flowering Trees and Shrubs in India,** Thacker & Co. Ltd., Fort Bombay, Second Edition, 1952.

2. DASTUR, J. R., **Medicinal Plants of India and Pakistan,** D. B. Taraporevala Sons & Co., Private Ltd., Bombay.

3. FERREIRA, V. JOHN, **Totemism in India,** Oxford University Press, Bombay, 1965.

4. FRAZER, J. G., **The Golden Bough,** Macmillan and Company, London, 1929.

5. GAMBLE, J. S., **Flora of the Presidency of Madras,** Vol. I, II & III, Botanical Survey of India. Calcutta, Second Edition, 1967.

6. HENLY, A.N., *et al.*, **Flora of Tamilnadu, India,** Vol. II, Botanical Survey of India, Coimbatore, 1987.

7. ———————————— **Flora of Tamilnadu, India,** Vol. III, Botanical Survey of India, Coimbatore, 1989.

8. HOOKER, J. D., **The Flora of British India,** Vol. I to III, L. R. Deve & Co. Ltd., Nr. Ashford, Kent, Reprint, 1954.

9. JAMES HASTINGS (Ed.), **Encyclopaedia of Religion and Ethics,** Vol. XII, T & T Clark, Edinburgh, Second Edition, 1934.

10. LUSHINGTON, A. W., **Vernacular list of Trees, Shrubs and Woody Climbers in the Madras Presidency,** Madras Govt. Publications, Madras, Vol. I, II A & II B, 1915.

11. MATTHEW, K.M. **The Flora of the Tamilnadu Carnatic, Vol. III,** Botanical Survey of India, Coimbatore, 1983.

12. Nair, N.C., Henry, A.N., **Flora of Tamilnadu, India,** Vol. I, Botanical Survey of India, Coimbatore, 1983.

13. SUBRAMANIAN PILLAI, G., **Tree Worship and Ophiolatory,** Annamalai University Publications, Annamalai Nagar, 1948.

14. THANI NAYAGAM, S. XAVIER, **Landscape and Poetry,** (A Study of Nature in Sangam Literature) Asha Publishing House, Second Edition, 1966.

15. VARADARAJAN, M., **The Treatment of Nature in Sangam Literature,** Thirunelveli Saiva Siddhantha Noor-pathippuk kazhagam, Madras, Second Edition, 1965.

16. WILLIS, J. C., **A Dictionary of the Flowering Plants and Ferns,** Cambridge University Press, Seventh Edition, 1966.

1. **The Temple of Sree Padmanabha,** Published by the Executive Officer, Sree Padmanabha Swami Temple, Trivandrum, 1977.

2. **Transaction of the Archeological Society of India,** (1965-68), Government Museum, Madras, 1978.





திருஆப்பாடி—காட்டாத்தி மரம்.

''தழைத்த தோராத்தியின் கீழ்த்தாபர மணலால் கூப்பி
அழைத்தங்கே யாவின் பாலைக்கறந்து கொண்டாட்டக் கண்டு
பிழைத்த தன்றாதை தாளைப் பெருங்கொடு மடுவால் வீசக்
குழைத்த தோர்அமுதம் ஈந்தார் குறுக்கை வீரட்டனாரே.'' —திருநாவுக்கரசர்



திருஆப்பாடி—காட்டாத்தி—அடிமரம்.



திருஆனைக்கா—வெண் நாவல்மரம்.

'வெண்ணா வலமர்ந்துறை வேதியனை...'
'வெணாவலின் மேவியவெம் அழகா...' —திருஞானசம்பந்தர்



திருஇடைமருதூர்—மருதமரம்.



திருஉத்தரகோசமங்கை—இலந்தைமரம்.



திருஉத்தரகோசமங்கை—இலந்தைமரத்தின் அடிப்பாகம் கல்மண்டபத்துள் உள்ளது.



திருஒற்றியூர்—மகிழமரம்.

'...போய் மகிழ்க்கீ ழிருவென்று
சொன்ன வெனைக் காணாமே சூளுறவு மகிழ்க்கீழே
என்ன வல்ல பெருமானே.' —சுந்தரர்



திருஓத்தூர்—பனைமரங்கள்.

'குரும்பை யாண்பனையீன் குலை யோத்தூர்...' —திருஞானசம்பந்தர்



திருக்கச்சி ஏகம்பம் (காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோவில்) மாமரம்.



திருக்குருகூர் (ஆழ்வார் திருநகரி)—புளியமரம்.



திருக்கொடுங்குன்றம்—பெயரில்லா விருட்சம்—அடிமரம்.



திருக்கொடுங்குன்றம்—பெயரில்லா விருட்சம்—மலர்.



திருத்துருத்தி (ஆடுதுறை—குத்தாலம்)—உக்தாலமரம்.



திருப்பனங்காடு—பனைமரம்.



திருப்புல்லாணி (திருமால் கோவில்)—அரசமரம்.



திருபுல்லாணி—அரசமரத்தின் கிளை தானே வளைந்து மண்ணில் வேரூன்றுகிறது.



திருமயிலாப்பூர்—புன்னைமரம்.

'மட்டிட்ட புன்னையங் கானன் மட மயிலை.' —திருஞானசம்பந்தர்



திருமுதுகுன்றம் (விருத்தாசலம்)—வன்னிமரம்—மேல் தோற்றம்.



திருமுதுகுன்றம்—வன்னி—அடிமரம்.



திருப்பரங்குன்றம்—கல்அத்திமரம் (பண்டு இருந்த மரம் இன்று இல்லை).



திருப்புனவாசல் (i) மகிழமரம்.



திருப்புனவாசல் (ii) குருந்தமரம்.



திருப்புனவாசல் (iii) புன்னைமரம்.



திருக்குறுக்கை—கடுக்காய்மரம்.



திருக்கோடிகா—கொடிப்பிரம்பு.



திருக்கோளிலி (திருக்குவளை)—தேற்றாமரம்.



திருவிளநகர்—விழல் புல்.



திருப்புன்கூர்—புன்குமரம்.



திருக்காழி (சீர்காழி)—பாரிஜாதம்.



**திருஆலவாய் (மதுரை)—கடம்பு.**

**பழைய அடிமரம் பட்டுப்போக அதன் மேல் பகுதியும் கீழ்ப் பகுதியும் வெள்ளித் தகட்டால் மூடிப் பாதுகாக்கப்படுகிறது.**



திருக்குற்றாலம்—குறும்பலா.
பட்டுப்போன அடிமரத்தின் பகுதிகள் பாதுகாக்கப்படுகின்றன.



திருப்பாதிரிப்புலியூர்—பாதிரி மரத்தின் பட்டுப்போன அடிமரம் முற்றிலுமாக செப்புத் தகட்டால் மூடிப் பாதுகாக்கப்படுகின்றன.



திருஆலவாய்—கடம்பமரம்.
வெளிப்பிரகாரத்தில் உள்ளது.



திருப்பனங்காடு—பனைமர வடிவத்தில் கல்சிலை.



திருப்பெருந்துறை—குருந்து—கல்லில் மரவடிவம்.



திருஆனைக்கா—கல்லில் மரவடிவம்.



திருக்குற்றாலம்—கல்லில் குறும்பலா வடிவம்.



திருக்குறுக்கை—கல்லில் மரவடிவம்.



திருக்கோளிலி (திருக்குவளை)—கல்லில் மரவடிவம்.



திருப்பனந்தாள்—உட்பிரகாரச் சுவரிலுள்ள படம்—தலமரத்தடியில் லிங்கம்.